உ

சிவமயம்.

மாணிக்கவாசகசுவாமிகள்

அருளிச்செய்த

திருச்சிற்றம்பலக்

# கோவையாருண்மை.



இஃது

மதுரையைச்சார்ந்த காரைக்குடி

ராம. நா. நாராயணச்செட்டியார்

கேட்டுக்கொண்டபடி,

யாழ்ப்பாணத்து நல்லூர்

ஸ்ரீலஸ்ரீ

## ஆறுமுகநாவலரவர்கள்

மருகரும், மாணாக்கரும், வித்துவசிரோமணியுமாகிய

ஸ்ரீமத்

## ச. பொன்னம்பலபிள்ளையவர்கள்

மாணாக்கர்

சி. தம்பையாபிள்ளையால்

பலபிரதிருபங்களைக்கொண்டுபரிசோதித்து,

சென்னபட்டணம்:

ஆறுமுகவிலாச யந்திரசாலையில்

அச்சிற் பதிப்பிக்கப்பட்டது.

ஜய௵ ஐப்பசி௴.

☞ சிவபெருமானே தமது அருமைத்திருவடி நிலத்திற்றோய எழுந்தருளிவந்து, "தம்மைக் கோவைபாடுதல் வேண்டும்" என்று கட்டளையிட்டருள, அவர் அருள் வழிப்பட்ட மாணிக்கவாசகசுவாமிகள் திருவாய்மலர்ந்த இத்திருக்கோவையாரின் துறைகளுக்கு ஆகமார்த்தமாகிய குறிப்புப்பொருளைத் "திருச்சிற்றம்பலக்கோவையாருண்மை" எனப்பெயர்தந்து எழுதிவைத்த அருந்தவக்கொள்கை அறிஞர்பெருமானார் இன்னார் என்பது தெரியவில்லை.

தேவார திருவாசகமுதலிய அருட்பாக்களுள் ஒன்றாகிய இத்திருக் கோவையார், செம்பொருளாகிய இலக்கண நூற்றுறைப் பொருளுணர்ச்சி யொன்றோடு தன்னை ஓதுவார்க்குச் சிவபத்தி வைராக்கிய ஞானங்களைப் பயத்தற்கட் சிறந்த கருவியாகாதெனக் கருதி, குறிப்புப்பொருளாகிய ஞானநூற்றுறைப்பொருளைப் பிண்டமாக எழுதித்தந்து உபகரித்த இவ்வுண்மை ஆசிரியரை திருக்கோவையார் பாராயணம் செய்யும் அன்பர்கள் தங்கள் ஞானசாரியர் எனவழிபட்டுக் கொண்டாடப் பின்னில்லார்.

சிவமயம்.

# சிறப்புப்பாயிரம்.

யாழ்ப்பாணத்து நல்லூர்

ஸ்ரீலஸ்ரீ. ஆறுமுகநாவலரவர்கள்

மருகரும், மாணாக்கரும், வித்துவசிரோமணியுமாகிய

ஸ்ரீமத். ச. பொன்னம்பலபிள்ளையவர்கள்

இயற்றிய

நிலைமண்டலவாசிரியப்பா.

சீரார் கொன்றை திகழ்ந்திடு சென்னி
யேரார் சங்கர னின்னருள் பெற்ற
திருவாத வூரடிச் செல்வர் செப்பிய
திருக்கோ வையாரின் செவ்விய வுண்மையைத்
தருக்கோ டிருவினை தமைப்புரிந் திடவரு
கருக்கோ டியினிற் றிருக்கா சறவே
பக்குவ ருணர்ந்து நெக்குள முருக
வக்கு மாலையு மருட்டிரு நீறு
மிக்கன வென்று மேற்கொளு மன்பன்
றக்கநல் லறத்துறை தானறிந் தொழுகுவோன்
வண்ணைவாழ் சின்னத் தம்பிவேள் வயக்க
நண்ணிய தவப்பய னாகிநன் குதித்தோ

னிலக்கண விலக்கிய மியல்பெறக் கற்ருேன்
புலக்குரி மாந்தர் நலக்குரி பண்பாற்
றம்பையனென்றித் தலத்தோர் சாற்றுஞ்
சுவாமி நாதனுந் தொல்பெயர்த் தோன்ற
லெழுதா வெழுத்தி னியைத்து வழுநீக்கி
வெளிப்படுத் தினனிம் மேதினி தனிலே.

---

யாழ்ப்பாணத்து மாதகல்

சைவபரிபாலன சபையின்

கௌரவப்பிரசாரகர்

**ப்ரம்மஸ்ரீ. ஏரம்பையரவர்கள்**

இயற்றிய

நேரிசையாசிரியப்பா.

திருவளர் மார்பத் துருவளர் கண்ணன்
மருவளர் பதுமத் தொருபெருந் தாதை
யிருவரு மிகலிப் பொருவறப் பொலிந்து
பெருநிலம் போகிய வருமருந் தன்ன
வடிமுடி யறியு மாதர வதனிற்
படிதனை நொடியிற் பகிரக் கிழிக்குந்
தாளுறு மேனமுந் தாவிச் சிறையாற்
கோளுறு மண்டம் போழுறு மெகினமு
மாகிய வுருக்கொண் டகந்தை மேலிட
மோகியர் வேகியர் மூள்சி னத்தராய்த்

துருவிச் சென்று துன்னுத லரிதென
மருவித் துதிக்கு மங்கை மணாளன்
சதுருறுந் துவாத சாந்தத் தலமாம்
பதியென விளங்கும் பகரால வாயி
னோதரு மோர்திசை யுயர்ந்தங் கோங்கும்
வாதவூர் வள்ளல் வாய்மலர்ந் தருளிய
கோவையி னுண்மையாங் கோதறு முரையைப்
பாவலர் மகிழப் பரப்பின னீழத்
தென்னிலங் காபுரி மன்னியாழ்ப் பாண
மென்னுநற் றேயத் திலங்கிய நல்லூர்
நாவலர் புகழுறு நாவல னென்றே
பூவுல களவோ தேவுல களவும்
பொங்கிய சீர்த்தி யங்கவன் மருகாய்த்
தங்கியு மக்குருத் தண்ணளி பெற்றுங்
கலைக்கட லனைத்து நிலைத்திடக் கொண்டே
மலைத்திடா தெவருந் தலைப்படப் புகட்டிப்
பயன்மிகும் பொன்னம் பலவப் பிள்ளை
வியனுறுஞ் சிரேட்ட வித்துவச் சிரோமணி
தன்னிடத் தன்பு மன்னிட நெடுநா
ளன்னிய மின்றி யமைதரக் கற்றோன்
றன்னா சிரியன் றன்னைப் போல
வுன்னரு நூல்க ளுறுநர்க் குரைப்போ
னல்லூர் மாவை சொல்லூர் மருதடி
பல்லூ ராலயம் பணிந்திடச் சாரு
மடியவர் முன்ன ரடர்ந்து பலவாய்க்
குடில வார்த்தைகள் கூறி நிற்கும்

விவிலியர் தூடணம் வினவ நீதென
நவிலரு மோர்சபை நண்ணிடக் கூட்டியும்
பத்திரப் புத்தகம் பரிவொடு பதிப்பித்
தெத்திசை தனிலு மெண்ணில பரப்பியுங்
கண்டன மியற்றி மிண்டிடா தோட்டி
யெண்டகு கீர்த்தி பண்டையிற் படைத்தோன்
கொச்சைச் சமயக் குழியில் வீழ
வச்செழு வூரி லடர்ந்த வெழுவரின்
முன்னர்ச் சென்று முதல்வன் மேன்மையைப்
பன்னிச் சைவப் பண்பைத் தேற்றித்
திருத்திய கருணை திகழ்ந்த வறிஞ
னுருத்த லில்லா வுயர்குண சீலன்
சிவனடி யவரைச் சிவனெனப் பேணிப்
பவவினை கெடுக்கும் பத்திமிக் குடையோன்
றுர்க்குணத் தவரைத் தூரத் தகற்றி
நற்குணத் தவரை நண்ணுறும் பெரியன்
றாளாண் முயற்சி தண்ணளி யுற்ற
வேளாண் குலத்தில் விளங்க வந்தோன்
சைவ தீக்கை யுய்வரப் பெற்று
மெய்திகழ் நூல்கள் விழைபவன் வண்ணைச்
சின்னத் தம்பி செய்த தவத்தான்
முன்ன வந்த முழுத்தவ முடையோன்
றம்பையா பிள்ளை யென்பதோர் பெயரை
யம்புவி யேத்திட வாண்டநற்
சுவாமி நாத சுகுண பண்டிதனே.

---

யாழ்ப்பாணத்துச்சுன்னாகம்

## ம-௱-௱-ஸ்ரீ. அ. குமாரசுவாமிப்புலவரவர்கள்

இயற்றிய

### நேரிசையாசிரியப்பா.

திருவளர் தில்லைச் சிதம்பர மன்றத்
தருவளர் காரண மாகிய நடனத்
தற்புத மூர்த்தி யதிபர மாப்தன்
சிற்பர வஸ்து தேவர்கள் பெருமான்
வேதிய வடிவம் விளங்குறப் பூண்டு
வாதவூ ரடிகண் மாமருங் கணவிப்
பேதை பாகனைப் பேரம் பலவனை
யோதி யாமெல்லா முய்யும் வண்ணம்
நாடருந் தமிழி னலமுறக் கோவை
பாடுக வென்னப் பரிவொடு பாடிய
வப்பெருங் கோவையு ளமைந்து கிடந்த
மெய்ப்பொரு ளிதுவென விளங்கத் திரட்டிக்
கொண்டதோ ரமுதாங் கோவையா ருண்மையை
மண்டலத் தறிஞர் மகிழ்ந்துகைக் கொள்ள
வச்சிற் பதிப்பித் தரும்புகழ் கொண்டா
னிச்சகத் தீழ மெய்தியாழ்ப் பாணமேற்
றீதகல் வண்ணைச் சின்னத் தம்பி
மாதவத் துதித்த வரம்பெறு காண்முளை
நல்லூ ரென்னு நகரியி லுறையுஞ்
சொல்லூர் வித்துவ சூளா மணியாம்

பொன்னம் பலவப் புலவன் மாட்டுப்
பன்னும் பலநூல் பயின்றுள வறிஞன்
நச்சுறு சிவமத நாட்டி யெங்கணுங்
குச்சித பரமதக் கோளரி வாளரி
சிவனடி யாரைச் சிவனென மதிப்போ
னுவமையில் தம்பைய வுத்தம னென்று
நிலங்கொள வழங்கு நீதி
நலங்கொளுஞ் சுவாமி நாத விற்பனனே.

---

சென்னை - அஷ்டாவதானம்

## பூ - கலியாணசுந்தரமுதலியாரவர்கள்

இயற்றிய

ஆசிரிய விருத்தம்.

---

வேதவே தாந்தவா கமமுடிவில் விளையாடும் விமலனெங்கள்
    வியன்றில்லை நடராஜன் றிருக்கரத்தி னிற்றீட்டி விளக்கஞ்செய்த
வாதவூர் வருஞான தானவள்ள லாரருள மருவுங் கோவை
    மன்னுமுண்மை யெனுமரிய வுரையினையச் சினிலேற்றி மகிழ்வி னீந்தா
னேதமில்சீ ரிலக்கியவி லக்கணமா மிருகடலுண் டேப்ப மிட்டோ
    னிணையில்சித் தாந்தநய மனைத்தினையு நனிதேர்ந்த வெழினற் சைவன்
போதமிகுங் கருணைபொறை யீகைதயை யுயரொழுக்கம் பொலிந்த சீலன்
    புகழுறுயாழ்ப் பாணவண் ணைப்பதிநற் றம்பையப் புலவ ரேறே.

---

சென்னை வித்துவான் ம-ா-ா-ஸ்ரீ. ம. தணிகாசலமுதலியாரவர்களும் சிந்தாத்திரிப்பேட்டை ம-ா-ா-ஸ்ரீ.கொ. சண்முகசுந்தரமுதலியாரவர்களும் தங்களிடத்திலுள்ள பிரதிரூபங்களைத் தந்து உபகரித்தமையால் அவர்கள் நன்றியை மிகவும் பாராட்டுகின்றேன்.

உ

கணபதிதுணை.

---

திருச்சிற்றம்பலம்.

# திருக்கோவையார்

என்கின்ற

## திருச்சிற்றம்பலக்கோவையாருண்மை.

---

### விநாயக வணக்கம்.

எண்ணிறைந்ததில்லையெழுகோபுரந்திகழக்
கண்ணிறைந்துநின்றருளுங்கற்பகமே - நண்ணியசீர்த்
தேனூறுசெஞ்சொற்றிருக்கோவையென்கின்ற
நானூறுமென்மனத்தேநல்கு.

### நூற்சிறப்பு.

ஆரணங்காணென்பரந்தணர்யோகியராகமத்தின்
காரணங்காணென்பர்காமுகர்காமநன்னூலதென்ப
ரேரணங்காணென்பரெண்ணரெழுத்தென்பரின்புலவோர்
சீரணங்காயசிற்றம்பலக்கோவையைச்செப்பிடினே.

இவ்விரண்டுசெய்யுளும் பிற்காலத்து
ஆன்றோராற் செய்யப்பட்டன.

பரமசிவன், கேவலாதீதமே யுண்மையாகிய ஆன்மாக்க ளுக்கு, அறிவு விளங்கும்பொருட்டுப் பெருங்கருணையினாலே பஞ்சசத்திகளைக் கொண்டு மூன்றுமாயைகளையும் பிரேரிப்பித்து, அவைகளின் காரியமாய்த் திருவருட்சத்திகளுடைய அதிட்டிதமாய்த் தத்துவதாத்துவிகமாகிய பூதபௌதிக பேதங்களாகுகின்ற கருவிகளைச் சுதந்திரமாகிய தனுகரணாதிகளாகக் கொடுத்துக் கேவலசகலப்படுத்திப் பரிபாகப்படுத்துகிறபோது, பசுபுண்ணிய மிகுதியால் தம்மையறியாமலொரு சிவபுண்ணியம் வந்து அதின் முதிர்ச்சியாகச் சரியை கிரியை யோகங்களைச்செய்துவரும்போது, குருபத்தியும் சிவபூசையும் அடியவர்கள் சற்சங்கமும் பலிக்கும். பலிக்கவே, மலபரிபாக சத்திநிபாத இருவினையொப்பு வந்து குருவுபதேச வுண்மையாகிய பரஞானம்பெற்று ஆனந்தநிட்டைகூடும். கூடவே, பசுகரணமெல்லாஞ் சிவகரணமாய் நிகழும். அப்படி நிகழுங்காலத்து வெளிப்பட்டுச் சிவானந்தம் விளங்கும். அச்சிவானந்த விளக்கத்துக்கு அடையாளம் ஆனந்தபாஷ்பமும் புளகமும் விம்மலும் நாத்தழுதழுத்தலும் பரவசமும் பாடலுமாம். அந்தப்பாடலாவது ஆனந்தமகிழ்ச்சியெல்லாம் வெளிப்படவிளங்கும் விளக்கம்.

அப்படிப்பட்ட ஞானிகளுடைய திருவாக்கின்பொருள் அப்படிப்பட்ட பேரின்பம் பெற்றவர்களுக்கே தெரியும். அந்தத்திருவாக்கைப் பதிவாக்கியமென்றே கொள்வதல்லது பசுவாக்கியமென்று நினைத்தாலுஞ் சனனமரணத்துக்கே வித்தாம். இவ்வுலகத்திலே பதிவாக்கியமேதென்னில், அநாதிமலமுத்தராயுள்ள சதாசிவமூர்த்தியுடைய திருவாக்காகிய ஆகமவேதங்களன்றி, முன் பரிபாகசின்னம் விளங்கும்படி போதிக்கின்ற

ஞானகுருமூர்த்தங்களாயுள்ள சந்தானசாரியர் சமயாசாரியருடைய திருவாக்குக்களுமாம். அவைகளிற் சந்தானசாரியர் திருவாக்குக்கள் சாத்திரமாயிருக்கும்; சமயாசாரியர் திருவாக்குக்கள் அதனனுபவப்பயனாகிய தோத்திரங்களாயிருக்கும். அந்தத்தோத்திரங்களாகிய மெய்ஞ்ஞானத் தேவாரம் திருவாசகம் திருச்சிற்றம்பலக் கோவையார் திருவிசைப்பா திருப்பல்லாண்டு திருத்தொண்டர் பெரியபுராணம் என்னுமிவைகள் சைவத்துக்கும் சிவபூசைக்கும் சிவாலய நித்திய நைமித்திகத்துக்கும் அடியவர்பூசைக்கும் நியமமந்திரங்களாயிருக்கும்.

சமயாசாரியர்களுடைய தோத்திரங்களெல்லாந் துறைகளிலமைந்தேயிருக்கும். தோத்திரங்களிற் றுறைசொல்ல வேண்டுவதென்னெனில், தோத்திரமாவது அன்பினாலே நிகழுமொழி. துறையை அன்பென்று சொல்வது எப்படியெனில், அன்பாவது தொடர்ச்சியுடையோரிடத்து வைத்த பற்று. பசுவானது கன்றிடத்துவைத்த இரக்கமென்று சொல்லலாம். அந்த இரக்கத்தொடர்ச்சியால் உள்ளமட்டு முருகுந்தன்மை வருணிக்கப் பாராட்டக்கூடாது. நாயகன் நாயகி இவர்களன்புத் தொடர்ச்சியை நானூறுவிதமாகப் பாராட்டி வருணிக்கக் கூடுமாதலாலும், நாயன்மார் வாக்குக்களும் அப்படியே யிருக்கையாலும், துறையாவது அன்பின் முதிர்ச்சியென்றேகொள்வது. இஃதன்றியும், உலகத்திற் காணாததற்கு உவமையாகக் கண்டதையே உவமித்தாலன்றி வேறொன்றாலறிவித்தால் அது புலப்படாது.

இஃதன்றியும், பரமசிவன் சுத்தான்மாக்களுக்குத் தமிழாலன்றி வேறொருபாடையாலும் நிரதிசயவின்பம் பிறவாதெ

ன்று திருவருட்பூமியாகிய தக்கிணத்திலே துவாதசாந்தபுரமாகிய மதுரைத்திருப்பதியிலே தெய்வப்புலமை விளங்கிய பொய்யடிமையில்லாத திருச்சங்கத்துள் இறையனரென்று தாமுமொருவராகி எழுந்தருளியிருந்து நக்கீரருக்கு அனுக்கிரகம் பண்ணுகிறபொழுது, இறையனாரகப்பொருளென்று பெயர்தந்து பஞ்சலக்கணத்திற் பொருளதிகாரமுழுதும் விளங்கும்படி சூத்திரமாக இந்தத்துறைகளையே திருவாய்மலர்ந்தருளினர். அத்துறைகளில் நாயன்மாருடைய தோத்திரங்களிலே திருவுள்ளத்தில் நிகழ்ந்தபடி சிலதுறைகள்வரும்.

திருவாதவூரடிகளாகிய மாணிக்கவாசக சுவாமியார் திருவாய்மலர்ந்தருளிய திருச்சிற்றம்பலக் கோவையாரிலே துறைகளுள்ளவெல்லாம் அடங்கும். அந்தத்துறைகளுக்கு இலக்கணம் விரிக்கிற்பெருகும். அவ்விலக்கணமுந் துறையும் உவமித்தறிதற்குக் கருவியன்றி உள்ளத்தில் நிகழும் அனுபவத்துக்குக் கருவியல்ல, அதற்குக் கருவி பக்குவமும் பரிபாகமும் உண்மையுப்தேசகுரு சம்பிரதாயமும் சிவானந்தானுபவமுமேயாம். அதுவன்றி ஆதியந்தமாக ஒருகதைசொன்னதல்ல. ஒருபிரபந்தமாகத் திருவாய்மலர்ந்தருளினதினலே கதைபோலத் தொடர்ச்சிதோன்ற இருக்கும். உலகத்துறைபோன்றிருந்தாலும் சிற்றின்பப்பொருளல்ல, பேரின்பப் பொருளாகவேயிருக்கும். பேரின்பப்பொருளாவது இலக்கணத்திற் றுறைசொன்ன முறைபோல, ஐந்துநிலமும் நாயகியும் நாயகனும் தோழியும் தோழனும் கூடல் பிரிதல் முதலிய பலதுறைகளும் அமைந்திருப்பது. அதையறியுமிடத்துத், தத்துவாதீததற்றரிசன சுத்தசாக்கிரத்தானமே குறிஞ்சிநிலம், போதாதீதத் திருவருட்டரிசன சுத்த

சொப்பனத்தானமே பாலைநிலம். அருளாதிக்கந்தானேயான சுத்தசுழூத்தித் தானமே முல்லைநிலம். அருளுருவ பேதசுத்ததுரியத்தானமே மருதநிலம். பரமசிவவின்பச் சுத்தாதீதமே நெய்தனிலம். இப்படி ஐந்துநிலமுஞ் சுத்தாவத்தைத் தானங்களாகவும் பஞ்சசத்தி அதிட்டானத்தானங்களாகவும் நாயகி பரம்பொருளாகவும் நாயகன் பக்குவான்மாவாகவும் தோழி திருவருளாகவும் தோழன் ஆன்மபோதமாகவும் செவிலித்தாய் திரோதாயியாகவும் நற்றாய் பரையாகவும் கொள்ளப்படும்.

துறைகளெல்லாம் நாயகியை ஆன்மநாயகியாகச் சொல்லியிருக்க, இவ்விடத்தில் நாயகியைச் சிவமாகச் சொல்லலாமோ எனில், இது தனியே ஒவ்வொருதுறைகளைச்சொல்லாது முழுவதுங் கோவையாகச் சொல்லுதலானும், பெறுவான் நாயகனும் பேறு நாயகியும் இன்பசுகம் நாயகியும் இன்பசுகத்தைப்பெறுவான் நாயகனும் இரசமும் நாவும்போல இருத்தலானும், முழுவதும் முற்றுவமையாகிய பெருமையும் சிறப்பும் சிற்றம்பலம்போலும் சிவானந்தம்போலும் என்னும் மேன்மையும் எல்லாம் நாயகிக்கே பெறுதலானும், நாயகியே பரம்பொருள். மேற்சிலசில துறைகளில் நாயகிசொல்லும்வார்த்தையும் தொழிலும் வருத்தமும் நாயகன்சொல்லும்வார்த்தையும் தொழிலும் வருத்தமும் வணக்கமாகவும் நிகழும்; எதினாலென்னில் அபேதவின்பமாகப் பெற்றானந்தமனுபவிக்குங்கால நிகழும் நிகழ்ச்சியெல்லாம் அருட்கருவியாகலான், நாயகன்கூற்றெல்லாம் சிறிதிடத்து நாயகிகூற்றாகவே நிகழும். அவ்விடங்களில் அறிந்து பயன்பெறல்வேண்டும். மேலிதற்குத் துறையிலக்கணம் வருமாறு:—

குறிஞ்சி பாலை முல்லை மருத
நெய்த லைந்திணைக் கெய்திய பெயரே.
புணர்தல் பிரித லிருத்த லிரங்க
லூட லிவற்றி னிமித்த மென்றிவை
தேருங் காலைத் திணைக்குரிப் பொருளே.

இது பொதுவிலக்கணம். துறை வருமாறு:—

இயற்கை பாங்க னிடந்தலை மதியுட
னிருவரு முள்வழி யவன்வர வுணர்தன்
முன்னுற வுணர்தல் குறையுற வுணர்த
னன்னிலை நாண நடுங்க நாடன்
மடல்குறை நயப்பு வழிச்சேட் படுத்த
லிடமிகு பகற்குறி யிரவுக் குறியோ
டொருவழித் தணத்த லுடன்கொண் டேகல்
வரைவு முடுக்கம் வரைபொருட் பிரிதன்
மணஞ்சிறப் போதல் வார்புவி காவ
லிணங்கலர்ப் பொருத்தல் வேந்தற் குற்றுழி
பொருள்வயிற் பிரிதல் பரத்தையிற் பிரிதலென்
றருள்வயிற் சிறந்த வகத்திணை மருங்கி
னிருளறு நிகழ்ச்சி யிவையென மொழிப.

இது துறைவகைக்குச்சூத்திரம். இந்த இருபத்தைந்து கொத்துக்கும் பேரின்பத்துறை வருமாறு:—

இயற்கைப் புணர்ச்சித் துறையீ ரொன்பதுஞ்
சத்திநி பாத மொத்திடுங் காலத்
துத்தம சற்குரு தரிசன மாகும். (க)

பாங்கற் கூட்டம் பதினெட் டின்பந்
தாங்குதற் போதந் தான்கண் டகறல். (உ)

இடந்தலைப் பாடீ ராறு மொன்று
மருட்குரு தரிசனத் தன்பு மிகுதியாற்
பேரா னந்தம் பெற்றனு பவித்தல். (ந)

மதியுடம் படுத்தல் வருமீ ரைந்துங்
குருவறி வித்த திருவரு ளதனைச்
சிவத்துடன் கலந்து தெரிசனம் புரிதல். (ச)

இருவரு முள்வழி யவன்வர வுணர்தற்
றுறையோ ரிரண்டுஞ் சிவமுயிர் விரவிய
தருளே யுணர்ந்திட லாகு மென்ப. (ரு)

முன்னுற வுணர்த லெனவிஃ தொன்றுஞ்
சிவமுயிர் கூட லருள் வினவியது. (சு)

குறையுற வுணர்தற் றுறையொரு நான்கு
முயிர்சிவத் திடைச்சென் றொருப்படுந் தன்மை
பணியாற் கண்டு பரிவால் வினயது. (எ)

நாண நாட்டத் துறையோ ரைந்து
மருளே சிவத்தை யதிசயித் துயிரின்
பக்குவந் தன்னைப் பலவும் வியந்தது. (அ)

நடுங்க நாட்ட மொன்றுஞ் சிவமே
யுயிரிடைக் கருணையென் றுற்றரு ணோக்கல். (கூ)

மடற்றுறை யொன்பதுஞ் சிவத்திடை மோக
முற்ற வுயிரருள் பற்றி யுரைத்தது. (கo)

குறைநயப் புத்துறை யவையிரு நான்குஞ்
சிவத்தோ டுயிரைச் சேர்க்க வேண்டி
யுயிர்ப்பரி வெடுத்தெடுத் துரைத்தறி வுறுத்தல். (கக)

சேட்படை யிருபத் தாறு துறையுங்
கிடையா வின்பங் கிடைத்தலா லுயிரை
யருமை காட்டி யறியாள் போலப்
பலபல வருமை பற்றி யுரைத்த
வருளே சிவத்தோ டாக்க வருளல். (கஉ)

பகற்குறித் துறைமுப் பதிறே டிரண்டு
மியற்கைபோற் சிவத்தோ டியலுறக் கூட்டிப்
பிரித்த வருளின் பெரும்பகற் குறியே. (கங)

இரவுக் குறித்துறை முப்பத்து மூன்று
மருளே சிவத்தோ டாக்கியவ் வருமை
தெரியவற் புறுத்திச் சிவனது கருணையி
னிச்சை பலவு மெடுத்தெடுத் தருளல். (கச)

ஒருவழித் தணத்த லொருபதின் மூன்றுஞ்
சிவனது கருணை யருடெரி வித்தது. (கரு)

உடன்போக் கைம்பதோ டாறு துறையு
மருளுயிர்க் கருமை யறிய வுணர்த்தலு
மானந் தத்திடை யழுத்தித் திரோதை
பரைவழி யாகப் பண்புணர்த் தியது. (கசு)

வரைவு முடுக்க மொருபதி னாறுஞ்
சிவனது கருணை தெரிய வுரைத்தவ்
வின்பம் பெறவரு ளெடுத்தியம் பியது. (கஎ)

வரைபொருட் பிரிதற் றுறை முப்பத்து
மூன்றுங் கருணை தோன்ற வருளே
யுணர்த்தலு முணர்தலுந் திரோதையும் பரையுந்
தெரிசன மாகித் திவ்விய வின்பங்
கூடுங் குறியுங் குலவி யுணர்த்தல். (கஅ)

மணஞ்சிறப் புரைத்தல் வருமோ ரொன்பது
முயிர்சிவ மணம்பெற் றுண்மையின் பாகிப்
பரைகடந் தின்பப் பண்பாய் நிற்றல். (ககூ)

கல்வியிற் பிரிவொரு நான்குங் காதல்
புல்லுமா னந்த வின்பப் பூரணஞ்
சொல்லும் பயனின் றிறம்பா ராட்டல். (உ0)

காவற் பிரிவுத் துறையோ ரிரண்டு
மின்பத் திறத்தை யெங்குங் காண்டல். (உக)

பகைதணி வித்தற் றுறையோ ரிரண்டு
மெங்கு மின்பக் கனமென் றியறல். (உஉ)

உற்றுழிப் பிரிவீ ரெட்டுமா னந்தம்
பெற்றவா ராமை முற்று முரைத்தல். (உங)

பொருட்பிரி விருபது மருட்பிரி வுயிரோ
யானந்த மாகி யதுவே தானாய்த்
தானே யதுவாய்ப் பேசிய கருணை. (உச)

பரத்தையிற் பிரித லெண்ணொ ன்று
முரைத்த சிவானந்த முற்றது வாம்பி
னெப்பத மெவ்வுயி ரெவ்வுல கியாவு
மப்படி யேகண் டறிவு பூரண
மாகிநின் றளவி லனுபவம் பெற்று
நின்ற தன்மை நிலைமை யுரைத்தது. (உரு)

## ௧. இயற்கைப்புணர்ச்சி.

இயற்கைப் புணர்ச்சியாவது சற்குரு தரிசனம். இது பதி னெட்டுத்துறை யுடைத்து. அவை வருமாறு:—

காட்சியையந் தெளிதனயப்பே
யுட்கோடெய்வந் துணிதல்கைக்கிளையொடு
கலவியுரைத்த லிருவயினொத்தல்
கிளவிவேட்ட னலம்புனைந்துரைத்தல்
பிரிவுணர்த்தல்லொடு பருவரலறித
லருட்குணமுரைத்த லணிமைகூற
லாடிடத்துய்த்த லருமையறிதல்
பாங்கியையறித லெனவீரொன்பா
னீங்காவியற்கை நெறியெனமொழிப.

### காட்சி.

௧. பேரின்பக்கிளவி. குருவின் றிருமேனிகாண்டல்.

௧. சிற்றின்பக்கிளவி. மதிவாணுதல் வளர்வஞ்சியைக் கதிர்வேலவன் கண்ணுற்றது.

திருவளர்தாமரைசீர்வளர்காவிகளீசர்தில்லைக்
குருவளர்பூங்குமிழ்கோங்குபைங்காந்தள்கொண்டோங்குதெய்வ
மருவளர்மாலையோர்வல்லியினொல்கியனநடைவாய்ந்
துருவளர்காமன்றன்வென்றிக்கொடிபோன்றொளிர்கின்றதே. (௧)

### ஐயம்.

௨. பே. திருமேனியைவியந் தையமுறுதல்.

௨. சி. தெரியவரியதோர் தெய்வமென்ன அருவரைநாடனையுற்றது.

போதோவிசும்போபுனலோபணிகளதுபதியோ
யாதோவறிகுவதேதுமரிதியமன்விடுத்த
தூதோவனங்கன்றுணையோவிணையிலிதொல்லைத்தில்லை
மாதோமடமயிலோவெனநின்றவர்வாழ்பதியே. (௨)

## தெளிதல்.

௩. பே. பார்வைபோலும் வடிவென்றறிந்தது.

௩. சி. அணங்கல்லளென் றயில்வேலவன்
குணங்களைநோக்கிக் குறித்துரைத்தது.

பாயும்விடையரன்றில்லையன்னாள்படைக்கண்ணிமைக்குந்
தோயுநிலத்தடிதூமலர்வாடுந்துயரமெய்தி
யாயுமனனேயணங்கல்லளம்மாமுலைசுமந்து
தேயுமருங்குற்பெரும்பணைத்தோளிச்சிறுநுதலே. (௩)

## நயப்பு.

௪. பே. திருமேனியாற்பயன் பெறலாமென்றறிந்தது.

௪. சி. வண்டமர்புரிகுழ லொண்டொடிமடந்தையை
நயந்தவண்ணல் வியந்துள்ளியது.

அகல்கின்றவல்குற்றடமதுகொங்கையவையவநீ
புகல்கின்றதென்னைநெஞ்சுண்டேயிடையடையார்புரங்க
ளிகல்குன்றவில்லிற்செற்றோன்றில்லையீசனெம்மானெதிர்ந்த
பகல்குன்றப்பல்லுகுத்தோன்பழனம்மன்னபல்வளைக்கே. (௪)

## உட்கோள்.

௫. பே. தன்னிடத்திற்கருணை யுண்டென்றறிந்தது.

௫. சி. இறைதிருக்கரத்து மறிமானோக்கி
யுள்ளக்கருத்து வள்ளலறிந்தது.

அணியுமமிழ்துமென்னாவியுமாயவன்றில்லைச்சிந்தா
மணியும்பராரறியாமறையோனடிவாழ்த்தலரிற்
பிணியுமதற்குமருந்தும்பிறழப்பிறழமின்னும்
பணியும்புரைமருங்குற்பெருந்தோளிபடைக்கண்களே. (௫)

## தெய்வத்தைமகிழ்தல்.

சு. பே. தன்றவத்தினை வியந்தது.

சு. சி. அன்னமென்னடை யரிவையைத்தந்த
மன்னிருந்தெய்வத்தை மகிழ்ந்துரைத்தது.

வளைபயில்கீழ்கடனின்றிடமேல்கடல்வானுகத்தின்
றுளைவழிநேர்கழிகோத்தெனத்தில்லைத்தொல்லோன்கயிலைக்
கிளைவயினீக்கியிக்கெண்டையங்கண்ணியைக்கொண்டுதந்த
விளைவையல்லால்வியவேனயவேன்றெய்வமிக்கனவே. (சு)

## புணர்ச்சிதுணிதல்.

எ. பே. இன்பம்பெற நினைந்தது.

எ. சி. கொவ்வைச்செவ்வாய்க் கொடியிடைப்பேதையைத்
தெய்வப்புணர்ச்சி செம்மறுணிந்தது.

ஏழுடையான்பொழிலெட்டுடையான்புயமென்னைமுன்னா
ளூழுடையான்புலியூரன்னபொன்னிவ்வுயர்பொழில்வாய்ச்
சூழுடையாயத்தைநீக்கும்விதிதுணையாமனனே
யாழுடையார்மணங்காணணங்காய்வந்தகப்பட்டதே. (எ)

## கலவியுரைத்தல்.

அ. பே. பெற்றவின் பத்தைவியந்தது.

அ. சி. கொலைவேலவன் கொடியிடையொடு
கலவியின்பங் கட்டுரைத்தது.

சொற்பாலமுதிவள்யான்சுவையென்னத் துணிந்திங்ஙனே
நற்பால்வினைத்தெய்வந்தந்தின்றுநானிவளாம்பகுதிப்
பொற்பாரறிவார்புலியூர்ப்புனிதன்பொதியில்வெற்பிற்
கற்பாவியவரைவாய்க்கடிதோட்டகளவகத்தே. (அ)

## இருவயினொத்தல்.

கூ. பே. பெற்றவின்பம் புதிதாய்ப்பேணியது.

கூ. சி. ஆராவின்பத் தன்புமீதூர
வரார்முலையை மகிழ்ந்துரைத்தது.

உணர்ந்தார்க்குணர்வரியோன்தில்லைச்சிற்றம்பலத்தொருத்தன்
குணந்தான்வெளிப்பட்டகொவ்வைச்செவ்வாயிக்கொடியிடைதோள்
புணர்ந்தாற்புணருந்தொறும்பெரும்போகம்பின்னும்புதிதாய்
மணந்தாழ்புரிகுழலாளல்குல்போலவளர்கின்றதே. (கூ)

## கிளவிவேட்டல்.

க0. பே. குருமொழிவேண்டிக் குறையிரந்துரைத்தது.

க0. சி. அன்னமன்னவ ளவயவங்கண்டு
மென்மொழிகேட்க விருப்புற்றது.

அளவியையார்க்குமறிவரியோன்தில்லையம்பலம்போல்
வளவியவான்கொங்கைவாட்டடங்கண்ணுதன்மாமதியின்
பிளவியன்மின்னிடைபேரமைதோளிதுபெற்றியென்றாற்
கிளவியையென்னோவினிக்கிள்ளையார்வாயிற்கேட்கின்றதே. (க0)

## நலம்புனைந்துரைத்தல்.

கக. பே. அன்பானலங் கொண்டாடியது.

கக. சி. பொங்கிழையைப் புனைநலம்புகழ்ந்
தங்கதிர்வேலோ னயர்வுநீங்கியது.

கூம்பலங்கைத்தலத்தன்பரென்பூடுருகக்குனிக்கும்
பாம்பலங்காரப்பரன்றில்லையம்பலம்பாடலரிற்
றேம்பலஞ்சிற்றிடையீங்கிவடங்கனிவாய்கமழு
மாம்பலம்போதுளவோவளிகாணும்மகன்பணையே. (கக)

பிரிவுணர்த்தல்.

கஉ. பே. திருமேனிப்பிரி வான்மயங்கியது.

கஉ. சி. பணிவளரல்குலைப் பயிர்ப்புறுத்திப்
பிணிமலர்த்தாரோன் பிரிவுணர்த்தியது.

சிந்தாமணிதெண்கடலமிர்தந்தில்லையானருளால்
வந்தாலிகழப்படுமேமடமான்விழிமயிலே
யந்தாமரையன்னமேநின்னையானகன்றுற்றுவனோ
சிந்தாகுலமுற்றென்னோவென்னைவாட்டந்திருத்துவதே. (கஉ)

பருவரலறிதல்.

கந. பே. திருவுளத் திரக்கங்கண்டது.

கந. சி. பிரிவுணர்ந்த பெண்கொடிதன்
பருவரலின் பரிசுநினைந்தது.

கோங்கிற்பொலியரும்பேய்கொங்கைபங்கன்குறுகலரூர்
தீங்கிற்புகச்செற்றகொற்றவன்சிற்றம்பலமனையா
ணீங்கிற்புணர்வரிதென்றோநெடிதிங்ஙனேயிருந்தா
லாங்கிற்பழியாமெனவோவறியேணயர்கின்றதே. (கந)

அருட்குணமுரைத்தல்.

கச. பே. அருட்குப்பிரி வில்லையென்றறிந்தது.

கச. சி. கூட்டியதெய்வத் தின்னருட்குணம்
வாட்டமின்மை வள்ளலுரைத்தது.

தேவரிற்பெற்றநஞ்செல்வக்கடிவடிவார்திருவே
யாவரிற்பெற்றினியார்சிதைப்பாரிமையாதமுக்கண்
மூவரிற்பெற்றவர்சிற்றம்பலமணிமொய்பொழில்வாய்ப்
பூவரிற்பெற்றகுழலியென்வாடிப்புலம்புவதே. (கச)

## இடமணித்துக்கூறிவற்புறுத்தல்.

கரு. பே. பிரிதல்போலன்றிப் பிரிவில்லையென்றது.

கரு. சி. மடவரலை வற்புறுத்தி
இடமணித்தென் றவணியம்பியது.

வருங்குன்றமொன் றுரித்தோன்றில்லையம்பலவன்மலயத்
திருங்குன்றவாணரிளங்கொடியேயிடரெய்தலெம்மூர்ப்
பருங்குன்றமாளிகைநுண்களபத்தொளிபாயநும்மூர்க்
கருங்குன்றம்வெண்ணிறக்கஞ்சுகமேய்க்குங்கனங்குழையே. (கரு)

## ஆடிடத்துய்த்தல்.

கசு. பே. சிவமருளுடனே சேர்தலறிந்தது.

கசு. சி. வன்புறையின் வற்புறுத்தி
அன்புறுமொழியை யருககன்றது.

தெளிவளர்வான்சிலைசெங்கனிவெண்முத்தந்திங்களின்வாய்ந்
தளிவளர்வல்லியன்னாய்முன்னியாடுபின்யானளவா
வொளிவளர்தில்லையொருவன்கயிலையுகுபெருந்தேன்
றுளிவளர்சாரற்கரந்துங்ஙனேவந்துதோன்றுவனே. (கசு)

## அருமையறிதல்.

கஎ. பே. கண்டவின்பங் கனவெனவியந்தது.

கஎ. சி. சுற்றமுமிடனுஞ் சூழவுநோக்கி
மற்றவளருமை மன்னனறிந்தது.

புணர்ப்போனிலனும்விசும்பும்பொருப்புந்தன்பூங்கழலின் [வா
றுணர்ப்போதெனக்கணியாக்குந்தொல்லோன்றில்லைச்சூழ்பொழில்
யிணர்ப்போதணிகுழலேழைதன்னீர்மையினீர்மையென்றூற்
புணர்ப்போகனவோபிறிதோவறியேன்புகுந்ததுவே. (கஎ)

பாங்கியையறிதல்.

கஅ. பே. சிவமறிவிக்கத் திருவருளைக்கண்டது.

கஅ. சி. கடல்புரையாயத்துக் காதற்றோழியை
மடவரல்காட்ட மன்னனறிந்தது.

உயிரொன் றுளமுமொன்றொன்றேசிறப்பியட்கென்னொடென்னப்
பயில்கின்றசென் றுசெவியுறநீள்படைக்கண்கள்விண்வாய்ச்
செயிரொன் றுமுப்புரஞ்செற்றவன் றில்லைச்சிற்றம்பலத்துப்
பயில்கின்றகூத்தனருளெனலாகும்பணிமொழிக்கே. (கஅ)

---

## உ. பாங்கற்கூட்டம்.

பாங்கற்கூட்டமாவது ஆன்மபோத தரிசனம். இது பதினெட்டுத்துறையுடைத்து. அவைவருமாறு:—

நினைதல் வினுத லுற்ற துரைத்தல்
கழறன் மறுத்தல் கவன் றுரைத் தல்லே
வலியழி வுரைத்தல் விதியொடு வெறுத்த
ஞெந்து கூற ஞேத னீங்கி
யியலிடங் கேட்ட லியலிடங் கூறல்
வற்புறுத் தல்குறி வழிச்சேறல் காண்டல்
வியந் துரைத்தலம் மெல்லிய றன்னைக்
கண்டமை கூறல் கருத்துக் கேற்பச்
செவ்வி செப்ப லவ்விடத் தேக
லீங்கிவை நிற்க விடந்தலை தனக்கு
மாங்கவண் மெலிதல் பொழில்கண்டு மகிழ்த
னீங்கா மகிழ்வொடு நிலைகண்டு வியத்த

றளர்வகன் றுரைத்தன் மொழிபெற வருந்தல்
கண்புதை வருத்தங் காவ னுண்விட
னண்பொடு சென்று நன்மருங் கணைத
லின்றியமை யாமை யாயத் துய்த்த
னின்று வருந்த னிகழா றைந்துந்
துன்று பாங்கற் றுறையென மொழிப.

பாங்கனை நினைதல்.

க. பே. அருள்போற்போத மாமெனநினைந்தது.
க. சி. எய்துதற்கருமை யேழையிற்றோன்றப்
பையுளுற்றவன் பாங்கனைநினைந்தது.

பூங்கனையார்புனற்றென்புலியூர்புரிந்தம்பலத்து
ளாங்கெனையாண்டுகொண்டாடும்பிரானடித்தாமரைக்கே
பாங்கனையானன்னபண்பனைக்கண்டிப்பரிசுரைத்தா
லீங்கெனையார்தடுப்பார்மடப்பாவையையெய்துதற்கே. (கக)

பாங்கன்வினுதல்.

உ. பே. மனத்தாற்கண்டிஃ தென்னெனவருந்தல்.
உ. சி. கலிகெழுதிரடோண் மெலிவதுகண்ட
இன்னுயிர்ப்பாங்கன் மன்னனைவினுயது.

சிறைவான்புனற்றில்லைச்சிற்றம்பலத்துமென்சிந்தையுள்ளு
முறைவானுயர்மதிற்கூடலினுய்ந்தவொண்டீந்தமிழின்
றுறைவாய்நுழைந்தனையோவன்றியேழிசைச்சூழல்புக்கோ
விறைவாதடவரைத்தோட்கென்கொலாம்புகுந்தெய்தியதே. (உ0)

## உற்றதுரைத்தல்.

௩. பே. உயிருளத்துடனே யுற்றதுரைத்தது.

௩. சி. மற்றவன் வினவ
உற்ற துரைத்தது.

கோம்பிக்கொதுங்கிமேயாமஞ்ஞைகுஞ்சரங்கோளிழைக்கும்
பாம்பைப்பிடித்துப்படங்கிழித்தாங்கப்பணைமுலைக்கே
தேம்பற்றுடியிடைமான்மடநோக்கிதில்லைச்சிவன்று
ளாம்பொற்றடமலர்சூடுமென்னுற்றலகற்றியதே. (உக)

## கழறியுரைத்தல்.

௪. பே. மனமுயிருடனே மயங்கியுரைத்தது.

௪. சி. வெற்பனைத்தன் மெய்ப்பாங்கன்
கற்பனையிற் கழறியது.

உளமாம்வகைநம்மையுய்யவந்தாண்டுசென்றும்பருய்யக்
களமாம்விடமமிர்தாக்கியதில்லைத்தொல்லோன்கயிலை
வளமாம்பொதும்பரின்வஞ்சித்துநின்றோர்வஞ்சிம்மருங்கு
லிளமான்விழித்ததென்றேவின்றெம்மண்ணலிரங்கியதே. (உஉ)

## கழற்றெதிர்மறுத்தல்.

௫. பே. போதத்தாற்காணும் பொருளன்றென்றது.

௫. சி. ஆங்குயிரன்ன பாங்கன்கழற
வளர்தருவெற்ப னுளந்தளர்ந்துரைத்தது.

சேணிற்பொலிசெம்பொன்மாளிகைத்தில்லைச்சிற்றம்பலத்து
மாணிக்கக்கூத்தன்வடவான்கயிலைமயிலைமன்னும்
பூணிற்பொலிகொங்கையாவியையோவியப்பொற்கொழுந்தைக்
காணிற்கழறலைகண்டிலைமென்றோட்கரும்பினையே. (உ௩)

## கவன்றுரைத்தல்.

சு. பே. பின்னும்போதந் தன்னிலைசொன்னது.
சு. சி. கொலைக்களிற்றண்ணல் குறைநயந்துரைப்பக்
கலக்கஞ்செய்பாங்கன் கவன்றுரைத்தது.

விலங்கலைக்கால்விண்டுமேன்மேலிடவிண்ணுமண்ணுமுந்நீர்க்
கலங்கலைச்சென்றவன்றுங்கலங்காய்கமழ்கொன்றைதுன்று
மலங்கலைச்சூழ்ந்தசிற்றம்பலத்தானருளில்லவர்போற்
றுலங்கலைச்சென்றிதென்னேவள்ளலுள்ளந்துயர்கின்றதே. (உச)

## வலியழிவுரைத்தல்.

எ. பே. உயிர்நெஞ்சுடன்பட் டுருகியுரைத்தது.
எ. சி. நிறைபொறைதேற்ற நீதியொடுசொல்பு
மறியுறுநோக்கிற்கு வாடினேனென்றது.

தலைப்படுசால்பினுக்குந்தளரேன்சித்தம்பித்தனென்று
மலைத்தறிவாரில்லையாரையுந்தேற்றுவனெத்துணையுங்
கலைச்சிறுதிங்கண்மிலைத்தசிற்றம்பலவன்கயிலை
மலைச்சிறுமான்விழியாலழிவுற்றுமயங்கினனே. (உரு)

## விதியொடுவெறுத்தல்.

அ. பே. பின்னுமனத்தொடு பேதுற்றுநின்றது.
அ. சி. கல்விமிகுபாங்கன் கழறவெள்கிச்
செல்வமிகுசிலம்பன் றெரிந்துசெப்பியது.

நல்வினையுந்நயந்தின்றுவந்துநடுக்குமின்மேற்
கொல்வினைவல்லனகோங்கரும்பாமென்றுபாங்கன்சொல்ல
வில்வினைமேருவில்வைத்தவன்றில்லைதொழாரின்வெள்கித்
தொல்வினையாற்றுயருமெனதாருயிர்துப்புறவே. (உசு)

## பாங்கனேர்ந்துரைத்தல்.

கூ. பே. போதம்பின்னும் புகன்றுதானழிந்தது.
கூ. சி. இன்னுயிர்ப்பாங்க னேழையைச்சுட்டி
நின்னதுதன்மை நினைந்திலையென்றது.

ஆலத்தினால்மிர்தாக்கியகோன்றில்லையம்பலம்போற்
கோலத்தினாள்பொருட்டாகவமிர்தங்குணங்கெடினுங்
காலத்தினால்மழைமாறினுமாறாக்கவிகைநின்பொற்
சீலத்தைநீயுநினையாதொழிவதென்றீவினையே. (உஎ)

## இயலிடங்கேட்டல்.

க0. பே. உறுதிகண்டின்பிட மெங்கென்றுரைத்தது.
க0. சி. கழுமலெய்திய காதற்றோழன்
செழுமலைநாடனைத் தெரிந்துவினாயது.

நின்னுடைநீர்மையுநீயுமிவ்வாறுநினைத்தெருட்டு
மென்னுடைநீர்மையிதென்னென்பதேதில்லையோர்கொண்மூக்கண்
மன்னுடைமால்வரையோமலரோவிசும்போசிலம்பா
வென்னிடம்யாதியனின்னையின்னேசெய்தவீர்ங்கொடிக்கே. (உஅ)

## இயலிடங்கூறல்.

கக. பே. மகிழ்ந்திடநெஞ்சுக்கு வாழ்வெடுத்துரைத்தது.
கக. சி. அழுங்கலெய்திய வாருயிர்ப்பாங்கற்குச்
செழுங்கதிர்வேலோன் றெரிந்துசெப்பியது.

விழியாற்பிணையாம்விளங்கியலான்மயிலாமிழற்று
மொழியாற்கிளியாமுதுவானவர்தமுடித்தொகைகள்
கழியாக்கழற்றில்லைக்கூத்தன்கயிலைமுத்தம்மலைத்தேன்
கொழியாத்திகழும்பொழிற்கெழில்லாமெங்குலதெய்வமே. (உகூ)

## வற்புறுத்தல்.

கஉ. பே. போதம்போய்க்காணும் பொலிவெடுத்துரைத்தது.

கஉ. சி. பெயர்ந்துரைத்த பெருவரைநாடனை
வயங்கெழுபுகழோன் வற்புறுத்தியது.

குயிலைச்சிலம்படிக்கொம்பினைத்தில்லையெங்கூத்தப்பிரான்
கயிலைச்சிலம்பிற்பைம்பூம்புனங்காக்குங்கருங்கட்செவ்வாய்
மயிலைச்சிலம்பகண்டியான்போய்வருவன்வண்பூங்கொடிகள்
பயிலச்சிலம்பெதிர்கூய்ப்பண்ணைநண்ணும்பளிக்கறையே. (ருO)

## குறிவழிச்சேறல்.

கங. பே. நெஞ்சாற்கண்ட வின்பந்தேடல்.

கங. சி. அறைகழலண்ண லருளினவழியே
நிறைவுடைப்பாங்க னினைவொடுசென்றது.

கொடுங்கால்குலவரையேழ்பொழிலெழில்குன்றுமன்று
நடுங்காதவனைநடுங்கநுடங்குநடுவுடைய
விடங்காலயிற்கண்ணிமேவுங்கொலாந்தில்லையீசன்வெற்பிற்
றடங்கார்தருபெருவான்பொழினீழலந்தண்புனத்தே. (ருக)

## குறிவ்வழிக்காண்டல்.

கச. பே. போதமருளாற் போயின்பங்கண்டது.

கச. சி. குளிர்வரைநாடன் குறிவழிச்சென்று
தளிர்புரைமெல்லடித் தையலைக்கண்டது.

வடிக்கணிவைவஞ்சியஞ்சுமிடையிதுவாய்பவளந்
துடிக்கின்றவாவெற்பன்சொற்பரிசேயான்றொடர்ந்துவிடா
வடிச்சந்தமாமலரண்ணல்விண்ணோர்வணங்கம்பலம்போற்
படிச்சந்தமுமிதுவேயிவளேயப்பணிமொழியே. (ருஉ)

தலைவனைவியந்துரைத்தல்.

கரு. பே. நெஞ்சமுயிர்நினை வறிவெனப்புகழ்ந்தது.

கரு. சி. நயந்தவுருவு நலனுங்கண்டு
வியந்தவனையே மிகுத்துரைத்தது.

குவளைக்களத்தம்பலவன்குரைகழல்போற்கமலத்
தவளைப்பயங்கரமாகநின்ருண்டவவயவத்தி
னிவளைக்கண்டிங்குநின்றங்குவந்தத்துணையும்பகர்ந்த
கவளக்களிற்றண்ணலேதிண்ணியானிக்கடலிடத்தே. (௩௩)

கண்டமைகூறல்.

கசு. பே. போதநம்மாற் பொருந்துவ்தன்றென
ஆதரவாயுயிர்க் கறியவுரைத்தது.

கசு. சி. பிடிமிசைவைத்துப் பேதையதுநிலைமை
அடுதிறலண்ணற் கறியவுரைத்தது.

பணந்தாழரவரைச்சிற்றம்பலவர்பைம்பொற்கயிலைப்
புணர்ந்தாங்ககன்றபொருகரியுன்னிப்புனத்தயலே
மணந்தாழ்பொழிற்கண்வடிக்கண்பரப்பிமடப்பிடிவாய்
நிணந்தாழ்சுடரிலைவேலகண்டேனென்றுநின்றதுவே. (௩௪)

செவ்விசெப்பல்.

கஎ. பே. இன்பமறியு மியல்பன்றெனினு
நெஞ்சமணியெலா நின்றெடுத்துரைத்தது.

கஎ. சி. அற்புதன்கயிலை மற்பொலிசிலம்பற்
கவ்வுருக்கண்டவன் செவ்விசெப்பியது.

கயலுளவேகமலத்தலர்மீதுகனிபவளத்
தயலுளவேமுத்தமொத்தநிரையரனம்பலத்தி
னியலுளவேயிணைச்செப்புவெற்பாநினைதீர்ங்கொடிமேற்
புயலுளவேமலர்சூழ்ந்திருடேங்கிப்புரள்வனவே. (௩௫)

அவ்விடத்தேகல்.

கஅ. பே. போதரீங்கப் பொற்பாங்குரவன்
தெரிசனங்காணச் சென்றதன்மை.

கஅ. சி. அரிவையதுநிலைமை யறிந்தவனுரைப்ப
எரிகதிர்வேலோ னேகியது.

எயிற்குலமூன்றிருந்தீயெய்தவெய்தவன்றில்லையொத்துக்
குயிற்குலங்கொண்டுதொண்டைக்கனிவாய்க்குளிர்முத்தநிரைத்
தயிற்குலவேல்கமலத்திற்கிடத்தியனநடக்கு
மயிற்குலங்கண்டதுண்டேலதுவென்னுடைமன்னுயிரே. (ருசு)

---

## ரு. இடந்தலைப்பாடு.

இடந்தலைப்பாடாவது அன்பாலானந்தம் பெற்றனுபவித்தல். இது பதின்மூன்று துறையுடைத்து. அவை வருமாறு:—

பொழிலிடைச் சேற விடந்தலை சொன்ன
வழியொடு கூட்டி வகுத்திசி னோரே.

இதனையும் மேலைப் பாங்கற் கூட்டமுணர்த்திய சூத்திரத்தில் "ஈங்கிவைநிற்க விடந்தலைதனக்கும்" எனக்கூறியவாறே மின்னிடைமெலிதல் முதல்நின்றுவருந்துதலீறாகக்கூறப்பட்ட கிளவிகளோடுகூட்டி இடந்தலைப்பாடாமென்று வகுத்துரைத்துக்கொள்க. அவை பாங்கற்கூட்டத்திற்கும்,இடந்தலைப்பாட்டிற்கும், உரியவாமாறு என்னை யெனின், பாங்கற்கூட்டம் நிகழாதாயின் இடந்தலைப்பாடு நிகழும், இடந்தலைப்பாடு நிகழாதாயின் பாங்கற்கூட்டநிகழும் ஆதலின்.

## மின்னிடைமெலிதல்.

க. பே. சிவமுயிர்நோக்கித் திருவுளத்தெண்ணல்.

க. சி. மன்னனை நினைந்து
மின்னிடை மெலிந்தது.

ஆவியன்னாய்கவலேலகலேலென்றளித்தொளித்த
வாவியன்னார்மிக்கவாவினராய்க்கெழுமற்கழிவுற்
ருவியன்னார்மன்னியாடிடஞ்சேர்வர்கொலம்பலத்தெம்
மாவியன்னான்பயிலுங்கயிலாயத்தருவரையே. (௩எ)

## பொழில்கண்டுமகிழ்தல்.

உ. பே. பார்க்குமிடமெங்கும் பரனைக்கண்டது.

உ. சி. மணங்கமழ்பொழிலின் வடிவுகண்
டணங்கெனநினைந் தயர்வுநீங்கியது.

காம்பிணையாற்களிமாமயிலாற்கதிர்மாமணியால்
வாம்பிணையால்வல்லியொல்குதலான்மன்னுமம்பலவன்
பாம்பிணையாக்குழைகொண்டோன்கயிலைப்பயில்புனமுந்
தேம்பிணைவார்குழலாளெனத்தோன்றுமென்சிந்தனைக்கே. (௩அ)

## உயிரெனவியத்தல்.

௩. பே. அநாதியின்ப மரனெனக்காண்டல்.

௩. சி. வெறியுறுபொழிலின் வியன்பொதும்பரின்
நெறியுறுகுழலி நிலைமைகண்டது.

நேயத்ததாய்நென்னலென்னைப்புணர்ந்துநெஞ்சநெகப்போ
யாயத்ததாயமிழ்தாயணங்காயரனம்பலம்போற்
றேயத்ததாயென்றன்சிந்தையதாய்த்தெரியிற்பெரிது
மாயத்ததாகியிதோவந்துநின்றதென்மன்னுயிரே. (௩௯)

தளர்வகன்றுரைத்தல்.

ச. பே. நிருவிகாரமாய் நிலைபெறல்கண்டது.

ச. சி. பனிமதிநுதலியைப் பைம்பொழிலிடைத்
தனிநிலைகண்டு தளர்வகன்றுரைத்தது.

தாதிவர்போதுகொய்யார்தையலாரங்கைகூப்பநின்று
சோதிவரிப்பந்தடியார்சுனைப்புனலாடல்செய்யார்
போதிவர்கற்பகநாடுபுல்லென்னத்தம்பொன்னடிப்பா
யாதிவர்மாதவமம்பலத்தான்மலையெய்துதற்கே. (சo)

மொழிபெறவருந்தல்.

ரு. பே. திருவாய்மலராவிடி னுய்யேனென்றது.

ரு. சி. கூடற் கரிதென்ன
வாடி யுரைத்தது.

காவிநின்றேர்தருகண்டர்வண்டில்லைக்கண்ணூர்கமலத்
தேவியென்றேயையஞ்சென்றதன்றேயறியச்சிறிது
மாவியன்றன்னமென்னோக்கிநின்வாய்திறவாவிடிலென்
னாவியன்றேயமிழ்தேயணங்கேயின்றழிகின்றதே. (சக)

நாணிக்கண்புதைத்தல்.

சூ. பே. இன்பநாணுதல்போ லுயி ரின்னலெய்தியது.

சூ. சி. ஆயிடைத்தனிநின் றுற்றுதழிந்து
வேயுடைத்தோளியோர் மென்கொடிமறைந்தது.

அகலிடந்தாவியவானேனறிந்திறைஞ்சம்பலத்தி
னிகலிடந்தாவிடையீசற்றொழாரினின்னற்கிடமா
யுகலிடந்தான்சென்றெனதுயிர்நையாவகையொதுங்கப்
புகலிடந்தாபொழில்வாயெழில்வாய்தருபூங்கொடியே. (சஉ)

### கண்புதைக்கவருந்தல்.

எ. பே. உயிர்தன்வருத்த முற்றுற்றுணர்த்தது.

எ. சி. வேற்றருங்கண்ணிணை மிளிர்வனவன்றுநின்
கூற்றருமேனியே கூற்றெனக்கென்றது.

தாழச்செய்தார்முடிதன்னடிக்கீழ்வைத்தவனைவிண்ணோர்
சூழச்செய்தானம்பலங்கைதொழாரினுள்ளந்துளங்கப்
போழச்செய்யாமல்வைவேற்கண்புதைத்துப்பொன்னேயென்னைநீ
வாழச்செய்தாய்சுற்றுமுற்றும்புதைநின்னைவாணுதலே. (சங)

### நாண்விடவருந்தல்.

அ. பே. இன்பநாணின்றி யெய்தல்கண்டின்புறல்.

அ. சி. ஆங்ஙனங்கண் டாற்றளாகி
நீங்கினநாணொடு நேரிழைநின்றது.

குருநாண்மலர்ப்பொழில்சூழ்தில்லைக்கூத்தனையேத்தலர்போல்
வருநாள்பிறவற்கவாழியரோமற்றென்கண்மணிபோன்
றொருநாள்பிரியாதுயிரிற்பழகியுடன்வளர்ந்த
வருநாணளியவழல்சேர்மெழுகொத்தழிகின்றதே. (சச)

### மருங்கணைதல்.

கூ. பே. திருவுருப்பரிவாற் பெருகுசுகம்பெறல்.

கூ. சி. ஒளிதிகழ்வார்குழ லளிகுலம்விலக்கிக்
கருங்களிற்றண்ணன் மருங்கணைந்தது.

கோலத்தனிக்கொம்பரும்பர்புக்கஃதேகுறைப்பவர்தஞ்
சீலத்தனகொங்கைதேற்றகிலேஞ்சிவன்றில்லையன்ன
ஞாலொத்தநேரிடைநொய்ம்மையெண்ணாதுநுண்டேனசையாற்
சாலத்தகாதுகண்டீர்வண்டுகாள்கொண்டைசார்வதுவே. (சரு)

இன்றியமையாமைகூறல்.

கo. பே. சித்தியெவையுஞ் சேர்ந்திடுமாயினும்
இத்தகையின்ப மிகழேனென்றது.

கo. சி. வென்றிவேலவன் மெல்லியறனக்
கின்றியமையாமை யெடுத்துரைத்தது.

நீங்கரும்பொற்கழற்சிற்றம்பலவர்நெடுவிசும்பும்
வாங்கிருந்தெண்கடல்வையமுமெய்தினும்யான்மறவேன்
றீங்கரும்புமமிழ்துஞ்செழுந்தேனும்பொதிந்துசெப்புங்
கோங்கரும்புந்தொலைத்தென்னையுமாட்கொண்டகொங்கைகளே. ()

ஆயத்துய்த்தல்.

கக. பே. மெய்யடியாரிடை வேறறக்கலந்
தையமின்றி யமர்தலையறிதல்.

கக. சி. தேங்கமழ் சிலம்பன்
பாங்கிற் கூட்டியது.

சூளாமணியும்பர்க்காயவன்சூழ்பொழிற்றில்லையன்னாய்க்
காளாயொழிந்ததென்னாருயிராரழிழ்தேயணங்கே
தோளாமணியேபிணையேபலசொல்லியென்னை துன்னு
நாளார்மலர்ப்பொழில்வாயெழிலாயநணுகுகவே. (சஎ)

நின்றுவருந்தல்.

கஉ. பே. திருவுருநீங்குந் திறமரிதென்றது.

கஉ. சி. பாங்கிற்கூட்டிப் பதிவயிற்பெயர்வோ
னீங்கற்கருமை நின்றுநினைந்தது.

பொய்யுடையார்க்கரன்போலகலும்மகன்முற்புணரின்
மெய்யுடையார்க்கவனம்பலம்போலமிகநணுகு
மையுடைவாட்கண்மணியுடைப்பூண்முலைவாணுதல்வான்
பையுடைவாளரவத்தல்குல்காக்கும்பைம்பூம்புனமே. (சஅ)

### பொழிலிடைச்சேறல்.

கங. பே. கைம்மாறின்றிக் கருணைசெய்தலா
லின்னமுமிவ்விடை யின்புறுமென்றது.

கங. சி. ஐயரிக்கண்ணியை யாடிடத்தேசென்
றெய்துவனெனநினைந் தேந்தல்சென்றது.

என்னறிவால்வந்ததன்றிதுமுன்னுமின்னும்முயன்றுன்
மன்னெறிதந்ததிருந்தன்றுதெய்வம்வருந்தனெஞ்சே
மின்னெறிசெஞ்சடைக்கூத்தப்பிரான்வியன்றில்லைமுந்நீர்
பொன்னெறிவார்துறைவாய்ச்சென்றுமின்றேய்பொழிலிடத்தே. ()

இவற்றுட் பொழிலிடைச்சேறலொன்றுமே இடந்தலைப்பாடாக வைத்து, மற்றைப் பன்னிரண்டினையும் பாங்கற்கூட்டத்திற் சேர்த்தலுமாம்.

---

## ச. மதியுடம்படுத்தல்.

மதியுடம் படுத்தலாவது அருள்சிவங் கலந்துயிர் தரிசனஞ்செய்தல். இது பத்துத் துறையுடைத்து. அவை வருமாறு:—

சேற றுணிதல் வேழம் வினுதல்
கலைமான் வழிபதி பெயர்வினு தல்லே
மொழிபெறு துரைத்தல் கருத்தறி வித்த
லிடைவி னுதலோ டிவையீ ரைந்து
மடவரற் றோழிக்கு மதியுடம் படுத்தல்.

### பாங்கியிடைச்சேறல்.

க. பே. திருவருளாற்சிவம் பெறுதலறிந்தது.

க. சி. கரந்துறைகிளவியிற் காதற்றோழியை
இரந்துகுறையுறுவலென் றேந்தல்சென்றது.

எளிதன்றினிக்கனிவாய்வல்லிபுல்லலெழின்மதிக்கீற்
ருளிசென்றசெஞ்சடைக்கூத்தப்பிரானையுன்னுரினென்கட்
டெளிசென்றவேற்கண்வருவித்தசெல்லலெல்லாந்தெளிவித்
தளிசென்றபூங்குழற்றோழிக்குவாழியறிவிப்பனே. (௰)

## குறையுறத்துணிதல்.

உ. பே. சிவமேகாட்டத் திருவருளையுணர்தல்.

உ. சி. ஓரிடத்தவரை யொருங்குகண்டுதன்
பேரிடர்பெருந்தகை பேசத்துணிந்தது.

குவளைக்கருங்கட்கொடியேரிடையிக்கொடிகடைக்க
ணுவளைத்தனதுயிரென்றதுதன்னோடுவமையில்லா
தவளைத்தன்பால்வைத்தசிற்றம்பலத்தானருளிலர்போற்
றுவளத்தலைவந்தவின்னலின்னேயினிச்சொல்லுவனே. (௫௧)

## வேழம்வினுதல்.

ங. பே. அருள்சிவங்கலந்த வருமையுயிர்தேர்தல்.

ங. சி. ஏழையரிருவரு மிருந்தசெவ்வியுள்
வேழம்வினூஅய் வெற்பன்சென்றது.

இருங்களியாயின்றியானிறுமாப்பவின்பம்பணிவோர்
மருங்களியாவனலாடவல்லோன்றில்லையான்மலையீங்
கொருங்களியார்ப்பவுமிழ்மும்மதத்திருகோட்டொருகீள்
கருங்களியார்மதயானையுண்டோவரக்கண்டதுவே. (௫உ)

## கலைமான்வினுதல்.

ச. பே. அருள்விடைபெறுமற் பின்னும்புகறல்.

ச. சி. சிலைமா னண்ணல்
கலைமான் வினயது.

கருங்கண்ணனையறியாமைநின்றோன்றில்லைக்கார்ப்பொழில்வாய்
வருங்கண்ணனையவண்டாடும்வளரிளவல்லியன்னீ
ரிருங்கண்ணனையகணைபொருபுண்புணரிப்புனத்தின்
மருங்கண்ணனையதுண்டோவந்ததீங்கொருவான்கலையே. (௫ங)

வழிவினுதல்.

ரு. பே. வழிமேல்வைத்துப் புகலிலையென்றது.
ரு. சி. கலைமான்வினுய கருத்துவேறறிய
மலைமானண்ணல் வழிவினுயது.

சிலம்பணிகொண்டசெஞ்சீறடிபங்கன்றன்சீரடியார்
குலம்பணிகொள்ளவெனைக்கொடுத்தோன்கொண்டுதாணணியுங்
கலம்பணிகொண்டிடமம்பலங்கொண்டவன்கார்க்கயிலைச்
சிலம்பணிகொண்டநுஞ்சீறூர்க்குரைமின்கள்சென்னெறியே. (ருச)

பதிவினுதல்.

சு. பே. அருளறியாவிடி னறியேனென்றது.
சு. சி. பதியொடுபிறவினுய் மொழிபலமொழிந்து
மதியுடம்படுக்க மன்னன்வலிந்தது.

ஒருங்கடமூவெயிலொற்றைக்கணைகொள்சிற்றம்பலவன்
கருங்கடமூன்றுகுநால்வாய்க்கரியுரித்தோன்கயிலை
யிருங்கடமூடும்பொழிலெழிற்கொம்பரன்னீர்களின்னே
வருங்கடம்மூர்பகர்ந்தாற்பழியோவிங்குவாழ்பவர்க்கே. (ருரு)

பெயர்வினுதல்.

எ. பே. இன்பருணும மேதெனவினுயது.
எ. சி. பேரமைத் தோளியர்
பேர்வி னுயது.

தாரென்னவோங்குஞ்சடைமுடிமேற்றனித்திங்கள்வைத்த
காரென்னவாருங்கறைமிடற்றம்பலவன்கயிலை
யூரொன்னவென்னவும்வாய்திறவீரொழிவீர்பழியேற்
பேரொன்னவோவுரையீர்விரையீர்ங்குழற்பேதையரே. (ருசு)

## மொழிபெறுதுகூறல்.

அ. பே. திருவாய்மலராத் திறமெடுத்துரைத்தது.

அ. சி. தேமொழியவர் வாய்மொழிபெறுது
மட்டவிழ்தாரோன் கட்டுரைத்தது.

இரதமுடையநடமாட்டுடையவரொம்முடையர்
வரதமுடையவணிதில்லையன்னவரிப்புனத்தார்
விரதமுடையர்விருந்தொடுபேச்சின்மைமீட்டதன்றேற்
சரதமுடையர்மணிவாய்திறக்கிற்சலக்கென்பவே. (௫எ)

## கருத்தறிவித்தல்.

௯. பே. சார்த்தும்பச்சிலை தான்கொண்டருளி
அருளுந்திறத்தை யறியவுரைத்தது.

௯. சி. உரைத்த துரையாது
கருத்தறி வித்தது.

வின்னிறவாணுதல்வேனிறக்கண்மெல்லியலைமல்லற்
றன்னிறமொன்றிவிருத்திநின்றேன்றனதம்பலம்போன்
மின்னிறநுண்ணிடைப்பேரெழில்வெண்ணகைப்பைந்தொடியீர்
பொன்னிறவல்குலுக்காமோமணிநிறப்பூந்தழையே. (௫அ)

## இடைவினுதல்.

௧௦. பே. சிவத்திடையன்பு செல்லுதலன்றி
வேறிலையென்று விரும்பியுரைத்தது.

௧௦. சி. வழிபதி பிறவினுய்
மொழிபல மொழிந்தது.

கலைக்கீழகலல்குற்பாரமதாரங்கண்ணார்ந்திலங்கு
முலைக்கீழ்ச்சிறிதின்றிநிற்றன்முற்றுதன்றிலங்கையர்கோன்
மலைக்கீழ்விழச்செற்றசிற்றம்பலவர்வண்பூங்கயிலைச்
சிலைக்கீழ்க்கணையன்னகண்ணீரெதுநுங்கள்சிற்றிடையே. (௫௯)

## ௫. இருவருமுள்வழியவன்வரவுணர்தல்.

இருவருமுள்வழி யவன்வரவுணர்தலாவது சிவமுயிர் விரவிய தருளே தேறல். இது இரண்டு துறையுடைத்து. அவைவருமாறு:—

ஐய நாட லாங்கவை யிரண்டு
மையறு தோழி யவன்வர வுணர்தல்.

ஐயுறுதல்.

௧. பே. சிவமுயிர்கலத்த லருடேறிவினையது.

௧. சி. அடற்கதிர்வேலோன் றொடர்ச்சிநோக்கித்
தையற்பாங்கி யையமுற்றது.

பல்லிலனாகப்பகலைவென்றோன் றில்லைபாடலர்போ
லெல்லிலனாகத்தொடேனம்வினாவிவன்யாவன்கொலாம்
வில்லிலனாகத்தழைகையில்வேட்டைகொண்டாட்டமெய்யோர்
சொல்லிலனாகற்றவாகடவானிச்சுனைப்புனமே. (௬0)

அறிவுநாடல்.

௨. பே. உயிர்சிவங்கலந்த தருளேதேறியது.

௨. சி. வெற்பன்வினைய சொற்பதநோக்கி
நெறிகுழற்பாங்கி யறிவுநாடியது.

ஆழமன்னேவுடைத்திவ்வையர்வார்த்தையனங்கனைந்து
வீழமுன்னேக்கியவம்பலத்தான்வெற்பினிப்புனத்தே
வேழமுன்னைக்கலையாய்ப்பிறவாய்ப்பின்னுமென்றழையாய்
மாழைமென்னோக்கியிடையாய்க்கழிந்ததுவந்துவந்தே. (௬௧)

## ௬. முன்னுறவுணர்தல்.

முன்னுறவுணர்தலாவது சிவமுயிர்கூட வருள்வினவியது. இது ஒருதுறையுடைத்து. அது வருமாறு:—

வாட்டம் வினுதன் முன்னுற வுணர்தல்
கூட்டி யுணருங் குறிப்புரை யாகும்.

வாட்டம்வினுதல்.

க. பே. சிவனதுகருணையு முயிரதுதெளிவும்
அருளேகண்டின் பதனுடன்வினுயது.

க. சி. மின்னிடைமடந்தை தன்னியனேக்கி
வீங்குமென்முலைப் பாங்கிபகர்ந்தது.

நிருத்தம்பயின்றவன்சிற்றம்பலத்துநெற்றித்தனிக்க
ணெருத்தன்பயிலுங்கயிலைமலையினுயர்குடுமித்
திருத்தம்பயிலுஞ்சுனைகுடைந்தாடிச்சிலம்பெதிர்கூய்
வருத்தம்பயின்றுகொல்லோவல்லிமெல்லியல்வாடியதே. (௬௨)

---

## ௭. குறையுறவுணர்தல்.

குறையுறவுணர்தலாவது சிவமுயிர் கலத்தலருள் பணியாற் காண்டல். இது நான்கு துறையுடைத்து. அவை வருமாறு:—

குறையுற்று நிற்ற லவன்குறிப் பறித
லவள்குறிப் பறிதலோ டவர்நினை வெண்ணல்
கூறிய நான்குங் குறையுற வுணர்வெனத்
தேறிய பொருளிற் றெளிந்திசி னோரே.

## குறையுற்றுநிற்றல்.

க. பே. திருவுளப்பணியைச் செய்வேனென்றல்.

க. சி. கறையுற்ற வேலவன்
குறை யுற்றது.

மடுக்கோகடலின்விடுதிமிலன்றிமறிதிரைமீன்
படுக்கோபணிலம்பலகுளிக்கோபரன்றில்லைமுன்றிற்
கொடுக்கோவளைமற்றுநும்மையர்க்காயகுற்றேவல்செய்கோ
தொடுக்கோபணியீரணியீர்மலர்நுஞ்சுரிகுழற்கே. (௬௩)

## அவன்குறிப்பறிதல்.

உ. பே. பளிங்குபோற்சிவத்திடைப் பதிந்ததுயிரென்றது.

உ. சி. பொற்றொடித்தோளிதன் சிற்றிடைப்பாங்கி
வெறிப்பூஞ்சிலம்பன் குறிப்பறிந்தது.

அளியமன்னும்மொன்றுடைத்தண்ணலெண்ணரன்றில்லையன்னாள்
கிளியைமன்னுங்கடியச்செல்லநிற்பிற்கிளரள்கத்
தளியமர்ந்தேறின்வறிதேயிருப்பிற்பளிங்கடுத்த
வொளியமர்ந்தாங்கொன்றுபோன்றொன்றுதோன்றுமொளிமுகத்தே.

## அவள்குறிப்பறிதல்.

௩. பே. கருணையுயிரிடத்துக் கண்டருடேறல்.

௩. சி. ஆங்கவள் குறிப்புப்
பாங்கி பகர்ந்தது.

பிழைகொண்டொருவிக்கெடாதன்புசெய்யிற்பிறவியென்னு
முழைகொண்டொருவன்செல்லாமைநின்றம்பலத்தாடுமுன்னோ
னுழைகொண்டொருங்கிருநோக்கம்பயின்றவெம்மொண்ணுதன்மாந்
தழைகொண்டொருவனென்னுமுன்னமுள்ளந்தழைத்திடுமே. (௬௫)

### இருவர்நினைவுமொருவழியுணர்தல்.

௪. பே. இன்புயிரொன்றென் றருளதிசயித்தது.

௪. சி. அன்புறுநோக் காங்கறிந்
தின்புறுதோழி யெண்ணியது.

மெய்யேயிவற்கில்லைவேட்டையின்மேன்மனமீட்டிவளும்
பொய்யேபுனத்தினைகாப்பதிறைபுலியூரனையாண்
மையேர்குவளைக்கண்வண்டினம்வாழுஞ்செந்தாமரைவா
யெய்யேமெனினுங்குடைந்தின்பத்தேனுண்டெழிறருமே. (௬௬)

---

## அ. நாண நாட்டம்.

நாண நாட்டமாவது அருளுயிர்ப் பக்குவ மறிந்து வியந்தது. இது ஐந்து துறையுடைத்து. அவை வருமாறு:—

பிறைதொழு கென்றல் பின்னு மவளை
யுறவென் வேறு படுத்தி யுரைத்தல்
சுனையாடல் கூற றோற்றங் கண்டு
புணர்ச்சி யுரைத்தல் பொதுவெனக் கூறி
மதியுடம் படுதல் வழிநாண னடுங்கல்
புலிமிசை வைத்தல் புகலுங் காலே.

### பிறைதொழுகென்றல்.

க. பே. அருள்சிவத்திடையுயி ரார்ந்ததன்மை
வெளிப்படநின்று வினவியுரைத்தது.

க. சி. பிறைதொழுகென்று பேதைமாதரை
நறுநுதற்பாங்கி நாணநாட்டியது.

மைவார்கருங்கண்ணிசெங்கரங்கூப்புமறந்துமற்றப்
பொய்வானவரிற்புகாதுதன்பொற்கழற்கேயடியே

னுய்வான்புகவொளிர்தில்லைநின்ருேன்சடைமேலதொத்துச்
செவ்வானடைந்தபசுங்கதிர்வெள்ளைச்சிறுபிறைக்கே. (௬௭)

வேறுபடுத்துக்கூறல்.

௨. பே. உயிர்க்கின்பிச்சைகண் டுவந்தருள்விளையது.

௨. சி. வேய்வளைத்தோளியை வேறுபாடுகண்
டாய்வளைத்தோழி யணங்கென்றது.

அக்கின்றவாமணிசேர்கண்டனம்பலவன்மலயத்
திக்குன்றவாணர்கொழுந்திச்செழுந்தண்புனமுடையா
ளக்குன்றவாறமர்ந்தாடச்சென்ருளங்கமவ்வவையே
யொக்கின்றவாறணங்கேயிணங்காகுமுனக்கவளே. (௬௮)

சுனையாடல்கூறிநகைத்தல்.

௩. பே. கருணையுயிர்க்குக் காட்டும்பரிவு
தானறிந்தறியாத் தன்மையுரைத்தது.

௩. சி. மாணநாட்டிய வார்குழற்பேதையை
நாணநாட்டி நகைசெய்தது.

செந்நிறமேனிவெண்ணீறணிவோன்றில்லையம்பலம்போ
லந்நிறமேனிநின்கொங்கையிலங்கழிகுங்குமமு
மைந்நிறவார்குழன்மாலையுந்தாதும்வளாய்மதஞ்சே
ரிந்நிறமும்பெறின்யானுங்குடைவனிருஞ்சுனையே. (௬௯)

புணர்ச்சியுரைத்தல்.

௪. பே. சிவனதுகருணை யருளேதேறி
இந்தவதிசய மெங்குமில்லென்றது.

௪. சி. மணக்குறி நோக்கிப்
புணர்ச்சி யுரைத்தது.

பருங்கண்கவர்கொலைவேழப்படையோன்படப்படர்தீத்
தருங்கண் ணுதற்றில்லையம்பலத்தோன்றடமால்வரைவாய்க்
கருங்கண்சிவப்பக்கனிவாய்விளர்ப்பக்கண்ணாரளிபின்
வருங்கண்மலைமலர்சூட்டவற்றேமற்றவ்வான்சுனையே. (எ0)

மதியுடம்படுதல்.

ரு. பே. உயிர்சிவமொன்ற ஞெழிலாலறிந்தது.

ரு. சி. அயில்வேற்கண்ணியொ டாடவன்றனக்குயிரொன்
மயிலியற்றேழி மதியுடம்பட்டது. [றெனை

காகத்திருகண்ணிற்கொன்றேமணிகலந்தாங்கிருவ
ராகத்துளோருயிர்கண்டனம்யாமின்றியாவையுமா
மேகத்தொருவனிரும்பொழிலம்பலவன்மலையிற்
றேகைக்குந்தோன்றற்குமொன்றாய்வருமின்பத்துன்பங்களே. (எக)

## ௬. நடுங்கநாட்டம்.

நடுங்கநாட்டமாவது சிவமேகருணை யென்றருளுணக்கல். இது ஒருதுறையுடைத்து. அது வருமாறு:—

மேல் "நடுங்கல், புலிமிசை வைத்தல் புகலுங் காலே."

புலிமிசைவைத்தல்.

க. பே. கருணையளவின்மை யருள்கண்டுமகிழ்தல்.

க. சி. நுடங்கிடைப் பாங்கி
நடுங்க நாடியது.

ஆவாவிருவரறியாவடி தில்லையம்பலத்து
மூவாயிரவர்வணங்கநின்றேனையுன்னரின்முன்னித்
தீவாயுழுவைகிழித்ததந்தோசிறிதேபிழைப்பித்
தாவாமணிவேல்பணிகொண்டவாறின்றோண்டகையே. (எஉ)

## ௧௦. மடற்றிறம்.

மடற்றிறமாவது உயிரின்புறவே யருளொடுரைத்தது. இது ஒன்பது துறையுடைத்து. அவை வருமாறு:—

ஆற்ரு துரைத்த லுலகின்மேல் வைத்த
றன்றுணி புரைத்த லொடுவகை யுரைத்த
லருளா லரிதென னடையா லரிதென
லவயவ மெழுத லரிதென விலக்க
லுடம்படாது விலக்க லுடம்பட்டு விலக்க
றிடம்பட வொன்பதுஞ் செப்புங் காலை
வடம்படு முலைமேன் மடலா கும்மே.

ஆற்ருதுரைத்தல்.

௧. பே. அருளைநம்பியுயிர் மிகவுமிரங்கியது.

௧. சி. மல்லற்றிரள் வரைத்தோளவன்
சொல்லாற்ருது சொல்லியது.

பொருளாவெனைப்புகுந்தாண்டுபுரந்தரன்மாலயன்பா
லிருளாயிருக்குமொளிநின்றசிற்றம்பலமெனலாஞ்
சுருளார்கருங்குழல்வெண்ணகைச்செவ்வாய்த்துடியிடையீ
ரருளாதொழியினொழியாதழியுமென்னுருயிரே. (எ௩)

உலகின்மேல்வைத்துரைத்தல்.

௨. பே. இன்பம்பெருர்க்குடல் வம்பெனவுரைத்தது.

௨. சி. புலவேலண்ணல் புனைமடலேற்
றுலகின்மேல்வைத் துய்த்துரைத்தது.

காய்சினவேலன்னமின்னியல்கண்ணின்வலைகலந்து
வீசினபோதுள்ளமீனிழந்தார்வியன்றென்புலியூ

ரீசனசாந்துமெருக்குமணிந்தோர்கிழிபிடித்துப்
பாய்சினமாவெனவேறுவர்சீறூர்ப்பனைமடலே. (௭௪)

தன்றுணிபுரைத்தல்.

௩. பே. சிவம்பெறுவிடி லுய்யேனென் றருளுடன்செப்பல்.
௩. சி. மானவேலவன் மடன்மாமிசை
யானுமேறுவ னென்னவுரைத்தது.

விண்ணைமடங்கவிரிநீர்பரந்துவெற்புக்கரப்ப
மண்ணைமடங்கவருமொருகாலத்துமன்னிநிற்கு
மண்ணன்மடங்கலதளம்பலவனருளிலர்போற்
பெண்ணைமடன்மிசையான்வரப்பண்ணிற்றோர்பெண்கொடியே. ௭௫

மடலேறும்வகையுரைத்தல்.

௪. பே. இவன்சிவனடிமையென் றெவருஞ்செப்ப
இழிபாயெங்குந் திரிவேனென்றது.
௪. சி. அடல்வேலவ னழிவுற்று
மடலேறும் வகையுரைத்தது.

கழிகின்றவென்னையுநின்றநின்கார்மயிறன்னையும்யான்
கிழியொன்றநாடியெழுதிக்கைக்கொண்டென்பிறவிகெட்டின்
றழிகின்றதாக்கியதாளம்பலவன்கயிலையந்தேன்
பொழிகின்றசாரனுஞ்சீறூர்த்தெருவிடைப்போதுவனே. (௭௬)

அருளாலரிதெனவிலக்கல்.

௫. பே. அருளேயுயிரை யழுத்திநிந்தை
வருமோபக்குவ வகையாலென்றது.
௫. சி. அடல்வேலண்ண லருளுடைமையின்
மடலேற்றுனக் கரிதென்றது.

நடனும்வணங்குந்தொல்லோனெல்லைநான்முகன்மாலறியாக்
கடனுமுருவத்தரன்றில்லைமல்லற்கண்ணார்ந்தபெண்ணை
யுடனும்பெடையொடொண்சேவலுமுட்டையுங்கட்டழித்து
மடனும்புனைதரின்யார்கண்ணதோமன்னவின்னருளே. (எஎ)

மொழிநடையெழுதலரிதெனவிலக்கல்.

சு. பே. அருள்சிவத்தருமை * யறியப்படாதெனல்.

சு. சி. அவயவமரிதி னண்ணறீட்டினும்
இவையிவைதீட்ட லியலாதென்றது.

அடிச்சந்தமால்கண்டிலாதனகாட்டிவந்தாண்டுகொண்டென்
முடிச்சந்தமாமலராக்குமுன்னோன்புலியூர்புரையுங்
கடிச்சந்தயாழ்கற்றமென்மொழிக்கன்னியனநடைக்குப்
படிச்சந்தமாக்கும்படமுளவோநும்பரிசகத்தே. (எஅ)

அவயவமெழுதலரிதெனவிலக்கல்.

எ. பே. சிவனதுகருணையுஞ் செயலுமொருவரா
லறியப்படாதிஃ தரிதேயென்றது.

எ. சி. அவயவ மானவை
யிவையிவை யென்றது.

யாழுமெழுதியெழின்முத்தெழுதியிருளின்மென்பூச்
சூழுமெழுதியொர்தொண்டையுந்தீட்டியென்றேல்பிறவி
யேழுமெழுதாவகைசிதைத்தோன்புலியூரிளமாம்
போழுமெழுதிற்றோர்கொம்பருண்டேற்கொண்டுபோதுகவே. (எகூ)

உடம்படாதுவிலக்கல்.

அ. பே. சிவத்திடையாமே சேர்த்துமென்று
வன்மையொழியும் வகையையுரைத்தது.

அ. சி. அடிபடையண்ண லழிதுயரொழிகென
மடநடைத்தோழி மடல்விலக்கியது.

---

* அருமை என்றது - குணம் குறி இவற்றை.

ஊர்வாயொழிவாயுயர்பெண்ணைத்திண்மடனின்குறிப்புச்
சீர்வாய்சிலம்பதிருத்தவிருந்திலமீசர் தில்லைக்
கார்வாய்குழலிக்குன்றுதரவோதிக்கற்பித்துக்கண்டா
லார்வாய்தரினறிவார்பின்னைச்செய்கவறிந்தனவே. (அ0)

உடம்பட்டுவிலக்கல்.

கூ. பே. என்வழிச்சிவமே யிருத்தலாலுன்றன்
குறையுங்கூறிக் கூட்டுவனென்றது.

கூ. சி. அரவருநுண்ணிடைக் குரவருகூந்தலென்
னுள்ளக்கருத்து விள்ளாளென்றது.

பைந்நாணரவன்படுகடல்வாய்ப்படுநஞ்சமுதா
மைந்நாண்மணிகண்டன்மன்னும்புலியூர்மணந்தபொன்னிம்
மொய்ந்நாண்முதுதிரைவாயானமூழ்கினுமென்னின்முன்னு
மிந்நாளிதுமதுவார்குழலாட்கென்கணின்னருளே. (அக)

---

## கக. குறைநயப்புக்கூறல்.

குறைநயப்புக்கூறலாவது உயிர்ப்பரிவின்புக் கருள்புகன்றிடுதல். இது எட்டுத்துறையுடைத்து. அவை வருமாறு:—

குறிப்பறித லோடு மென்மொழி கூறல்
விரவிக் கூற லறியாள் போறல்
வஞ்சித் துரைத்தல் புலந்து கூறல்
வன்மொழி கூறன் மனத்தொடு நேர்தல்
சொன்னவிரு நான்குந் துறைகுறை நயப்பென
மன்னிய பொருளில் வகுத்திசி னோரே.

## குறிப்பறிதல்.

க. பே. சிவத்தோடுயிரைச் சேர்பரிவுரைத்தவ்
வருள்சிவக்குறிப்பை யாராய்ந்தது.

க. சி. நறைவளர்கோதையைக் குறைநயப்பித்தற்
குள்ளறிகுற்ற வொள்ளிழையுரைத்தது.

தாதேய்மலர்க்குஞ்சியஞ்சிறைவண்டுதெண்டேன்பருகித்
தேதேயெனுந்தில்லையோன்சேயெனச்சினவேலொருவர்
மாதேபுனத்திடைவாளாவருவர்வந்தியாதுஞ்சொல்லார்
யாதேசெயத்தக்கதுமதுவார்குழலேந்திழையே. (அஉ)

## மென்மொழியாற்கூறல்.

உ. பே. அருள்பணிமொழியா லரற்கறிவுறுத்தல்.

உ. சி. ஒளிருறுவேலவன் றளர்வுறுகின்றமை
இன்மொழியவட்கு மென்மொழிமொழிந்தது.

வரிசேர்தடங்கண்ணிமம்மர்கைம்மிக்கென்னமாயங்கொலோ
வெரிசேர்தளிரன்னமேனியனீர்ந்தழையன்புலியூர்ப்
புரிசேர்சடையோன்புதல்வன்கொல்பூங்கணைவேள்கொலென்னத்
தெரியேமுரையான்பிரியானொருவனித்தேம்புனமே. (அங)

## விரவிக்கூறல்.

ங. பே. உயிர்ப்பரிவுவம்யா லுவந்தருளுரைத்தது.

ங. சி. வன்மொழியின்மன மெலிவதஞ்சி
மென்மொழிவிரவி மிகுத்துரைத்தது.

நீகண்டனையெனின்வாழலைநேரிழையம்பலத்தான்
சேய்கண்டனையன்சென்றாங்கோரலவன்றன்சீர்ப்பெடையின்
வாய்வண்டனையதொர்நாவற்கனிநனிநல்கக்கண்டு
பேய்கண்டனையதொன்றாகிநின்றானப்பெருந்தகையே. (அச)

## அறியாள்போறல்.

ச. பே. சிவமருட்கறியமற் றென்றூற்செப்பல்.

ச. சி. அறியாள் போன்று
குறியாள் கூறியது.

சங்கந்தருமுத்தியாம்பெறவான்கழிதான்கெழுமிப்
பொங்கும்புனற்கங்கைதாங்கிப்பொலிகலிப்பாறுலவு
துங்கமலிதலையேந்தலினேந்திழைதொல்லைப்பன்மா
வங்கமலிகலிநீர்தில்லைவானவனேர்வருமே. (அரு)

## வஞ்சித்துரைத்தல்.

ரு. பே. சிவமுயிர்க்கொன்றூற் பின்னுஞ்செப்பல்.

ரு. சி. நெஞ்சநெகிழ்வகை வஞ்சித்திவையிவை
செஞ்சடையோன்புகழ் வஞ்சிக்குரைத்தது.

புரங்கடந்தானடிகாண்பான்புவிவிண்டுபுக்கறியா
திரங்கிடெந்தாயென்றிரப்பத்தன்னீரடிக்கென்னிரண்டு
கரங்கடந்தானென்றுகாட்டமற்றாங்கதுங்காட்டிடென்று
வரங்கிடந்தான்றில்லையம்பலமுன்றிலம்மாயவனே. (அசா)

## புலந்துகூறல்.

சா. பே. அருடனைவெறுத்தறற் கறியவுரைத்தது.

சா. சி. திருந்தியசொல்லிற் செவ்விபெறாது
வருந்தியசொல்லின் வகுத்துரைத்தது.

உள்ளப்படுவெனவுள்ளியுரைத்தக்கவர்க்குரைத்து
மெள்ளப்படிறுதுணிதுணியேலிதுவேண்டுவல்யான்
கள்ளப்படிறர்க்கருளாவரன்றில்லைகாணலர்போற்
கொள்ளப்படாதுமறப்பதறிவிலென்கூற்றுக்களே. (அஎ)

வன்மொழியாற்கூறல்.

எ. பே. அருள்செயாவிடினுல கல்ராமமழிவாமல் * ரெனல்.

எ. சி. கடலுலகறியக் கமழலந்துறைவன்
மடலேறும்மென வன்மொழிமொழிந்தது.

மேவியந்தோலுடுக்குந்தில்லையான்பொடிமெய்யிற்கையி
லோவியந்தோன் றுங்கிழிநின்னெழிலென் றுரையுளதாற்
றாவியந்தோகையன்னயென்னபாவஞ்சொல்லாடல்செய்யான்
பாவியந்தோபனைமாமடலேறக்கொல்பாவித்ததே. (அஅ)

மனத்தொடுநேர்தல்.

அ. பே. சிவமுயிர்க்கின்பஞ் சேரவிரங்கல்.

அ. சி. அடல்வேலவ னற்றுனெனக்
கடலமிழ்தன்னவள் காணலுற்றது.

பொன்னூர்சடையோன்புலியூர்புகழாரெனப்புரிநோ
யென்னலறிவில்லையானென் றுரைக்கிலன்வந்தயலார்
சொன்னூரெனுமித் துரிசுதன்னைமைத் துணைமனனே
யென்னாழ்துயர்வல்லையேற்சொல் லுநீர்மையினியவர்க்கே. (அகூ)

---

## கஉ. சேட்படை.

சேட்படையாவது கிடையாவின்பத் தருமைகாட்டல் இது இருபத்தாறு துறையுடைத்து. அவை வருமாறு:—

தழைகொண்டு சேற றகாதென்று மறுத்த
னிலத்தின்மை கூற னினைவறிவு கூறல்
படைத்து மொழிதலொடு பனிமதி நுதலியை
யெடுத்துநா னுரைத்த லிசையாமை கூறல்

---

* மலர் என்பது - அருள்செய்யென்னும்பொருட்டு.

செவ்வியில ளென்றல் சேட்பட நிறுத்த
லவ்வினிய மொழிநீ யவட்குரை யென்றல்
குலமுறை கிளத்தல் கோதண் டத்தொழில்
வலிசொல்லி மறுத்தன் மற்றவற் கிரங்கல்
சிறப்பின்மை கூறல் சிறியளென் றுரைத்தன்
மறைத்தமை கூறி நகைத்துரை செய்த
ணகைகண்டு மகிழ்த னுனவ டன்னை
யறியே னென்ற லவயவங் கூறல்
கண்ணயந் துரைத்தல் கையுறை யெதிர்தன்
முகம்புக வுரைத்தன் முகங்கண்டு கூறல்
வகுத்து ரைத்தலொடு வண்டழை யவட்கு
மிகுத்துரை செய்து விரும்பிக் கொடுத்த
றழைவிருப் புரைத்த ருனிரு பத்தா
றிழைவளர் முலையா யிவைசேட் படையே.

தழைகொண்டுசேறல்.

க. பே. மலரெடுத்துயிரருள் வழியேசென்றது.

க. சி. கொய்ம்மலர்க்குழலி குறைநயந்தபின்
கையுறையோடு காளைசென்றது.

தேமென்கிளவிதன்பங்கத்திறையுறைதில்லையன்னீர்
பூமென்றழையுமம்போதுங்கொள்ளீர்தமியேன்புலம்ப
வாமென்றருங்கொடும்பாடுகள்செய்துநுங்கண்மலராங்
காமன்கணைகொண்டலைகொள்ளவோமுற்றக்கற்றதுவே. (கூ0)

சந்தனத்தழைதகாதென்றுமறுத்தல்.

உ. பே. உன்னறிவாமல ரொவ்வாதென்றது.

உ. சி. பிறைநுதற்பேதையைக் குறைநயப்பித்தபின்
வாட்படையண்ணலைச் சேட்படுத்தது.

ஆரத்தழையராப்பூண்டம்பலத்தனலாடியன்பர்க்
காரத்தழையன்பருளிநின்றேன்சென்றமாமலயத்
தாரத்தழையண்ணறந்தாலிவையவளல்குற்கண்டா
லாரத்தழைகொடுவந்தாரெனவருமையுறவே. (கூக)

நிலத்தின்மைகூறிமறுத்தல்.

ந. பே. உன்னறிவடியா ருருவாகாதென்றது.

ந. சி. கொங்கலர்தாரோய் கொணர்ந்தகொய்தழை
எங்குலத்தாருக் கேலாதென்றது.

முன்றகர்த்தெல்லாவிமையோரையும்பின்னைத்தக்கன்முத்தீச்
சென்றகத்தில்லாவகைசிதைத்தோன்றிருந்தம்பலவன்
குன்றகத்தில்லாத்தழையண்ணறந்தாற்கொடிச்சியருக்
கின்றகத்தில்லாப்பழிவந்துமூடுமென்றெள்குதுமே. (கூ௨)

நினைவறிவுகூறிமறுத்தல்.

ச. பே. சிவத்துளங்கண்டுனைத் தேற்றுவேனென்றது.

ச. சி. மைதழைக்கண்ணி மனமறிந்தல்லது
கொய்தழைதந்தாற் கொள்ளேமென்றது.

யாழார்மொழிமங்கைபங்கத்திறைவனெறிதிரைநீ
ரேழாயெழுபொழிலாயிருந்தோனின்றதில்லையன்ன
சூழார்குழலெழிற்றொண்டைச்செவ்வாய்நவ்விசொல்லறிந்தாற்
றாழாதெதிர்வந்துகோடுஞ்சிலம்பதருந்தழையே. (கூ௩)

படைத்துமொழியான்மறுத்தல்.

ரு. பே. சிவங்கொளுமுன்னுணர் வாகாதென்றது.

ரு. சி. அருந்தழைமேன்மேற் பெருந்தகைகொணரப்
படைத்துமொழிகிளவியிற் றடுத்தவண்மொழிந்தது.

எழில்வாயிளவஞ்சியும்விரும்புமற்றிறைகுறையுண்
டழல்வாயவிரொளியம்பலத்தாடுமெஞ்சோதியந்தீங்

குழல்வாய்மொழிமங்கைபங்கன்குற்ருலத்துக்கோலப்பிண்டிப்
பொழில்வாய்தடவரைவாயல்லதில்லையிப்பூந்தழையே. (கூச)

நாணுரைத்துமறுத்தல்.

ரு. பே. அடியாரறிவுக்குன் னறிவுபிறிதென்றது.

ரு. சி. வாணுதற் பேதையை
நாணுத லுரைத்தது.

உறுங்கண்ணிவந்தகணையுரவோன்பொடியாயொடுங்கத்
தெறுங்கண்ணிவந்தசிற்றம்பலவன்மலைச்சிற்றிலின்வாய்
நறுங்கண்ணிசூட்டினுநாணுமென்வாணுதனுகத்தொண்பூங்
குறுங்கண்ணிவேய்ந்திளமந்திகணுணுமிக்குன்றிடத்தே. (கூரு)

இசையாமைகூறிமறுத்தல்.

எ. பே. அடியாரறிவுபோலுன் னறிவாகாதென்றது.

எ. சி. வசைதீர் குலத்திற்
கிசையா தென்றது.

நறமனைவேங்கையின்பூப்பயில்பாறையைநாகநண்ணி
மறமனைவேங்கையெனநனியஞ்சுமஞ்சார்சிலம்பா
குறமனைவேங்கைச்சுணங்கொடணங்கலர்கூட்டுபவோ
நிறமனைவேங்கையதளம்பலவனெடுவரையே. (கூசு)

செவ்வியிலளென்றுமறுத்தல்.

அ. பே. சிவக்கனிபழுத்த திலையுனக்கென்றது.

அ. சி. நவ்வி நோக்கி
செவ்வியில ளென்றது.

கற்றிலகண்டன்னமென்னடைகண்மலர்நோக்கருளப்
பெற்றிலமென்பிணைபேச்சுப்பெருகிள்ளைபிள்ளையின்ருன்
றுற்றிலளுற்றதறிந்திலளாகத்தொளிமிளிரும்
புற்றிலவாளரவன்புலியூரன்னபூங்கொடியே. (கூஎ)

காப்புடைத்தென்றுமறுத்தல்.

கூ. பே. மேலாமின்பத்துக்குக் காலமில்லையென்றது.

கூ. சி. காப்புடைத் தென்று
சேட்ப டுத்தது.

முனிதருமன்னையுமென்னையர்சாலவுமூர்க்கரின்னே
தனிதருமிந்நிலத்தன்றையகுன்றமுந்தாழ்சடைமேற்
பனிதருதிங்களணியம்பலவர்பகைசெகுக்குங்
குனிதருதிண்சிலைக்கோடுசென்றான்சுடர்க்கொற்றவனே. (கூஅ)

நீயேகூறென்றுமறுத்தல்.

கO. பே. உன்னறிவாலின் புறுவைநீயென்றது.

கO. சி. அஞ்சுதும்பெரும பஞ்சின்மெல்லடியைக்
கூறுவநீயே கூறுகென்றது.

அந்தியின்வாயெழிலம்பலத்தெம்பரனம்பொன்வெற்பிற்
பந்தியின்வாய்ப்பலவின்சுளைபைந்தேனொடுங்கடுவன்
மந்தியின்வாய்க்கொடுத்தோம்புஞ்சிலம்பமனங்கனிய
முந்தியின்வாய்மொழிநீயேமொழிசென்றம்மொய்குழற்கே. (கூகூ)

குலமுறைகூறிமறுத்தல்.

கக. பே. உன்றனக்கின்ப மொக்குமோவென்றது.

கக. சி. தொழுகுலத்தீர் சொற்காகேம்
இழிகுலத்தே மெனவுரைத்தது.

தெங்கம்பழங்கமுகின்குலைசாடிக்கதலிசெற்றுக்
கொங்கம்பழனத்தொளிர்குளிர்நாட்டினைநீயுமைகூர்
பங்கம்பலவன்பரங்குன்றிற்குன்றன்னமாபதைப்பச்
சிங்கந்திரிதருசீறூர்ச்சிறுமியெந்தேமொழியே. (கOO)

நகையாடிமறுத்தல்.

௧௨. பே. உன்னறிவின்ப முறலரிதென்றது.

௧௨. சி. வாட்டழையெதிராது சேட்படுத்தற்கு
மென்னகைத்தோழி யின்னகைசெய்தது.

சிலையொன்றுவாணுதல்பங்கன்சிற்றம்பலவன்கயிலை
மலையொன்றுமாமுகத்தெம்மையரெய்கணைமண்குளிக்குங்
கலையொன்றுவெங்கணையோடுகெடுகிட்டதென்னிற்கெட்டேன்
கொலையொன்றுதிண்ணியவாறையர்கையிற்கொடுஞ்சிலையே. (௧0௧)

இரக்கத்தொடுமறுத்தல்.

௧௩. பே. என்னறிவிலையென் றெய்த்தற்கிரங்கியது.

௧௩. சி. கையுறையெதிராது காதற்றோழி
யையநீபெரிதயர்த் தனையென்றது.

மைத்தழையாநின்றமாமிடற்றம்பலவன்கழற்கே
மெய்த்தழையாநின்றவன்பினர்போலவிதிர்விதிர்த்துக்
கைத்தழையேந்திக்கடமாவினய்க்கையில்வில்லின்றியே
பித்தழையாநிற்பராலென்னபாவம்பெரியவரே. (௧0௨)

சிறப்பின்மைகூறிமறுத்தல்.

௧௪. பே. சிவத்திடைச்சேருந் திறமுயிர்க்கிலையெனல்.

௧௪. சி. மாந்தளிரு மலர்நீலமும்
ஏந்தலிம்மலை யில்லையென்றது.

அக்குமரவுமணிமணிக்கூத்தன்சிற்றம்பலமே
யொக்குமிவளதொளிருவஞ்சிமஞ்சார்சிலம்பா
கொக்குஞ்சுனையுங்குளிர்தளிருங்கொழும்போதுகளு
மிக்குன்றிலென்றுமலர்ந்தறியாதவியல்பினவே. (௧0௩)

## இளமைகூறிமறுத்தல்.

கரு. பே. இன்பமுதிர்ந்த நிலையுனக்கென்றது.

கரு. சி. முளையெயிற் றரிவை
விளைவில ளென்றது.

உருகுதலைச்சென்றவுள்ளத்துமம்பலத்தும்மொளியே
பெருகுதலைச்சென் றுநின்றோன்பெருந்துறைப்பிள்ளைகள்ளார்
முருகுதலைச்சென்றகூழைமுடியாமுலைபொடியா
வொருகுதலைச்சின்மழலைக்கென்னோவையவோதுவதே. (கoச)

## மறைத்தமைகூறிநகைத்துரைத்தல்.

கசு. பே. அருளன்றிச்சிவ மமையாதென்றது.

கசு. சி. என்னைமறைத்தபி னெண்ணியதரிதென
நன்னுதற்றோழி நகைசெய்தது.

பண்டாலியலுமிலைவளர்பாலகன்பார்கிழித்துத்
தொண்டாலியலுஞ்சுடர்க்கழலோன்றொல்லைத்தில்லையின்வாய்
வண்டாலியலும்வளர்பூந்துறைவமறைக்கினென்னைக்
கண்டாலியலுங்கடனில்லைகொல்லோகருதியதே. (கoரு)

## நகைகண்டுமகிழ்தல்.

கஎ. பே. அருணோக்கமின்றியின் பாமோவென்றது.

கஎ. சி. இன்னகைத்தோழி மென்னகைகண்டு
வண்ணக்கதிர்வே லண்ணலுரைத்தது.

மத்தகஞ்சேர்தனிநோக்கினன்வாக்கிறந்தூறமுதே
யொத்தகஞ்சேர்ந்தென்னையுய்யநின்றோன்றில்லையொத்திலங்கு
முத்தகஞ்சேர்மென்னகைப்பெருந்தோளிமுகமதியின்
வித்தகஞ்சேர்மெல்லெனோக்கமன்றோவென்விழுத்துணையே. (கoசு)

அறியாள்போன்றுநினைவுகேட்டல்.

கஅ. பே. இன்பம்பலவதி லெங்ஙனஞ்சிவமெனல்.

கஅ. சி. வேந்தன்சொன்ன மாந்தளிர்மேனியை
வெறியார்கோதை யறியேனென்றது.

விண்ணிறந்தார்நிலம்விண்டவரென்றுமிக்காரிருவர்
கண்ணிறந்தார்தில்லையம்பலத்தார்கழுக்குன்றினின்று
தண்ணறுந்தாதிவர்சந்தனச்சோலைப்பந்தாடுகின்ற
ரெண்ணிறந்தாரவர்யார்கண்ணதோமன்னநின்னருளே. (கOஎ)

அவயவங்கூறல்.

ககூ. பே. இன்பக்கன * மரன் றிருமேனியென்றது.

ககூ. சி. அவயவ மவளுக்
கிவையிவை யென்றது.

குவவினகொங்கைகுரும்பைகுழல்கொன்றைகொவ்வைசெவ்வாய்
கவவினவாணகைவெண்முத்தங்கண்மலர்செங்கழுநீர்
தவவினைதீர்ப்பவன்றூழ்பொழிற்சிற்றம்பலமனையாட்
குவவினநாண்மதிபோன்றொளிர்கின்றதொளிமுகமே. (கOஅ)

கண்ணயந்துரைத்தல்.

உO. பே. திருநோக்கின்பச் சேதனமென்றது.

உO. சி. கண்ணிணை பிறழ்வன
வண்ண முரைத்தது.

ஈசற்கியான்வைத்தவன்பினகன்றவன் வாங்கியவென்
பாசத்திற்காரென்றவன்றில்லையின்னொளிபோன்றவன்றோள்
பூசத்திருநீறெனவெளுத்தாங்கவன்பூங்கழல்யாம்
பேசத்திருவார்த்தையிற்பெருநீளம்பெருங்கண்களே. (கOக)

---

* இன்பக்கனம் - ஆனந்தமயம்.

## தழையெதிர்தல்.

உக. பே. அடிமைத்திறத்தாற்சிவத் தாக்குவனென்றது.

உக. சி. அகன்றவிடத் தாற்றுமைகண்டு
கவன்றதோழி கையுறையெதிர்ந்தது.

தோலாக்கரிவென்றதற்குந்துவள்விற்குமில்லின்றென்மைக்
கேலாப்பரிசுளவேயன்றியேலேமிருஞ்சிலம்ப
மாலார்க்கரியமலர்க்கழலம்பலவன்மலையிற்
கோலாப்பிரசமன்னாட்கையநீதந்தகொய்தழையே. (கக0)

## குறிப்பறிதல்.

உஉ. பே. பரிவுயிர்க்கருளெனப் பகரருள்கூறல்.

உஉ. சி. தழையெதிரா தொழிவதற்கோர்
சொல்லறியேனெனப் பல்வலக்குரைத்தது.

கழைகாண்டலுஞ்சுளியுங்களியானையன்னான்கரத்திற்
றழைகாண்டலும்பொய்தழைப்பமுன்காண்பனின்றம்பலத்தா
னுழைகாண்டலுநினைப்பாகுமென்னோக்கிமன்னோக்கங்கண்டா
லிழைகாண்பணைமுலையாயறியேன்சொல்லுமீடவற்கே. (ககக)

## குறிப்பறிந்துகூறல்.

உங. பே. வேறறியாவுயிர்க்கருள வேண்டுமென்றது.

உங. சி. ஏழைக் கிருந்தழை
தோழிகொண் டுரைத்தது.

தவளத்தநீறணியுந்தடந்தோளண்ணறன்னொருபா
லவளத்தனுமகனாந்தில்லையானன்றுரித்ததன்ன
கவளத்தயானைகடிந்தார்கரத்தகண்ணார்தழையுந்
துவளத்தகுவனவோசுரும்பார்குழற்றூமொழியே. (ககஉ)

## வகுத்துரைத்தல்.

உச. பே. சிவமுயிர்ப்பரிவரு டனக்குச்செப்பியது.

உச. சி. கடித்தழைகொணர்ந்த காதற்றோழி
மடக்கொடிமாதர்க்கு வகுத்துரைத்தது.

ஏறும்பழிதழையேற்பின்மற்றேலாவிடின்மடன்மா
வேறுமவனிடபங்கொடியேற்றிவந்தம்பலத்து
ளேறுமரன்மன்னுமீங்கோய்மலைநம்மிரும்புனங்காய்ந்
தேறுமலைதொலைத்தாற்கென்னையாஞ்செய்வதேந்திழையே. (ககரு)

## தழையேற்பித்தல்.

உரு. பே. அருளேயுயிர்ப்பணி சிவத்துக்காக்கல்.

உரு. சி. கருங்குழன்மடந்தைக் கரும்பெறற்றோழி
இருந்தழைகொள்கென விரும்பிக்கொடுத்தது.

தெவ்வரைமெய்யெரிகாய்சிலையாண்டென்னையாண்டுகொண்ட
செவ்வரைமேனியன்சிற்றம்பலவன்செழுங்கயிலை
யவ்வரைமேலன்றியில்லைகண்டாயுள்ளவாற்ருளா
னிவ்வரைமேற்சிலம்பன்னெளிதிற்றந்தவீர்ந்தழையே. (ககச)

## தழைவிருப்புரைத்தல்.

உசு. பே. உன்பணிசிவத்துக் குவப்பெனவுரைத்தது.

உசு. சி. விருப்பவ டோழி
பொருப்பற் குரைத்தது.

பாசத்தளையறுத்தாண்டுகொண்டோன்றில்லையம்பலஞ்சூழ்
தேசத்தனசெம்மனீதந்தனசென்றியான்கொடுத்தேன்
பேசிற்பெருகுஞ்சுருங்குமருங்குல்பெயர்ந்தரைத்துஃப்
பூசிற்றிலளன்றிச்செய்யாதனவில்லைபூந்தழையே. (ககரு)

## கரு. பகற்குறி.

பகற்குறியாவது இயற்கைபோற் சிவத்தோ டியலுறக்கூட் டல். இது முப்பத்திரண்டுதுறையுடைத்து. அவை வருமாறு:—

குறியிடங் கூற லாடிடம் படர்தல்
குறியிடைச் சேற லிடத்துய்த்து நீங்க
லுவந்து ரைத்தலொடு மருங்கணை தல்லே
யறிவறி வித்த லவனுண் மகிழ்த
லாயத் துய்த்த றோழிவந்து கூட
லாடிடம் புகுத றனிகண் டுரைத்த
றடமென் முலையாள் பருவங் கூறி
வரவு விலக்கன் வரைவுடம் படாது
மிகுத்து ரைத்தலொடு மெய்ம்மை யுரைத்தல்
வருத்தங் கூற றுயச்சங் கூற
லிற்செறி வறிவித்த றமர்நினை வுரைத்த
லெதிர்கோள் கூற லேறுகோள் கூற
லேதிலார் தம்முரை கூற லவளொடு
கூறுவாள் போன்று தினைமுதிர் வுரைத்தல்
பகல்வரல் விலக்கல் பையு ளெய்தித்
தினையொடு வெறுத்தல் சிறைப்புற மாக
வேங்கையொடு வெறுத்தல் வெற்பமர் நாடற்குக்
கழுமலுற் றிரங்கல் கடிப்புனங் கையறக்
கொய்தமை கூறல் பிரிவருமை கூறன்
ம்பிலொடு கூறல் வறும்புனங் காண்டல்
பயில்பதி நோக்கிப் பதிமிக வாடல்
சொன்னநா லெட்டுந் தோன்று மியற்கை
மன்னிய பகற்குறி வகையா கும்மே.

## குறியிடங்கூறல்.

க. பே. அருளுயிர்க்கின்ப மாமிடமுரைத்தது.

க. சி. வாடிடத்தண்ணல் வண்டழையெதிர்ந்தவள்
ஆடிடத்தின்னியல் பறியவுரைத்தது.

வானுழைவாளம்பலத்தரன்குன்றென்றுவட்கிவெய்யோன்
றானுழையாவிருளாய்ப்புறநாப்பண்வண்டாரகைபோற்
றேனுழைநாகமலர்ந்துதிகழ்பளிங்கான்மதியோன்
கானுழைவாழ்வுபெற்றாங்கெழில்காட்டுமொர்கார்ப்பொழிலே. (ககரு)

## ஆடிடம்படர்தல்.

உ. பே. இன்பந்தனைக்கொண் டேகாந்தத்தேகல்.

உ. சி. வண்டழையெதிர்ந்த வொண்டொடிப்பாங்கி
நீடமைத்தோளியொ டாடிடம்படர்ந்தது.

புயல்வளருசன்முன்னாடிப்பொன்னேபின்னைப்போய்ப்பொலியு
மயல்வளர்குன்றினின்றேற்றுமருவிதிருவுருவிற்
கயல்வளர்வாட்கண்ணிபோதருகாதரந்தீர்த்தருளுந்
தயல்வளர்மேனியனம்பலத்தான்வரைத்தண்புனத்தே. (ககள)

## குறியிடத்துக்கொண்டுசேறல்.

ங. பே. அருமையாற்சிவத்தை யுயிரிடத்தாக்கல்.

ங. சி. அணிவளராடிடத் தாயவெள்ள
மணிவளர்கொங்கையை மருங்ககன்றது.

தினைவளங்காத்துச்சிலம்பெதிர்கூஉய்ச்சிற்றின்முற்றிழைத்துச்
சுனைவளம்பாய்ந்துதுணைமலர்கொய்துதொழுதெழுவார்
வினைவளநீறெழநீறணியம்பலவன்றன்வெற்பிற்
புனைவளர்கொம்பரன்னாயன்னகாண்டும்புனமயிலே. (ககஅ)

## இடத்துய்த்துநீங்கல்.

ச. பே. அருள்சிவத்திடைச்சேர்த் தகன்றுநின்றது.
ச. சி. மடத்தகைமாதரை யிடத்தகத்துய்த்து
நீங்கலுற்ற பாங்கிபகர்ந்தது.

நரல்வேயினநினதோட்குடைந்துக்கநன்முத்தஞ்சிந்திப்
பரல்வேயறையுறைக்கும்பஞ்சடிப்பரன்றில்லையன்னாய்
வரல்வேய்தருவனிங்கேநிலுங்கேசென்றுன்வார்குழற்கேர்ங்
குரல்வேயளிமுரல்கொங்கார்தடமலர்கொண்டுவந்தே. (ககக)

## உவந்துரைத்தல்.

ரு. பே. உயிர்சிவந்தரிசித் துண்மகிழ்ந்துரைத்தது.
ரு. சி. களிமயிற்சாயலை யொருசிறைக்கண்ட
ஒளிமலர்த்தாரோ னுவந்துரைத்தது.

பட்மாசுணப்பள்ளியிக்குவடாக்கியப்பங்கயக்க
ணெடுமாலெனவென்னைநீநினைந்தோநெஞ்சத்தாமரையே
யிடமாவிருக்கலுற்றோதில்லைநின்றவனீர்ங்கயிலை
வடமார்முலைமடவாய்வந்துவைகிற்றிவ்வார்பொழிற்கே. (கஉ0)

## மருங்கணைதல்.

சா. பே. இன்பங்கண்டத ணியல்பெடுத்துரைத்தது.
சா. சி. வாணுதலரிவை நாணுதல்கண்ட
கோதைவேலவ னுதரவுரைத்தது.

தொத்தீன்மலர்ப்பொழிற்றில்லைத்தொல்லோனருளென்னமுன்னி
முத்தீன்குவளைமென்காந்தளின்மூடித்தன்னேரளப்பா
ளொத்தீர்ங்கொடியினொதுங்குகின்றாண்மருங்குன்னெருங்கப்
பித்தீர்பணைமுலைகாளென்னுக்கின்னும்பெருக்கின்றதே. (கஉக)

## பாங்கியறிவுரைத்தல்.

எ. பே. இன்பங்கண்டபின்னருட் டெரிசித்ததென்றது.

எ. சி. நெறிகுழற் பாங்கி
அறிவறி வித்தது.

அளிநீடளகத்தினட்டியதாதுமணியணியு
மொளிநீள்சுரிகுழற்சூழ்ந்தவொண்மாலையுந்தண்ணறவுண்
களிநீயெனச்செய்தவன்கடற்றில்லையன்னாய்கலங்க
றெளிநீயனையபொன்னேபன்னுகோலந்திருநுதலே. (கஉஉ)

## உண்மகிழ்ந்துரைத்தல்.

அ. பே. கண்டவின்ப மருட்கியம்பியது.

அ. சி. தண்மலர்க் கோதையை
யுண்மகிழ்ந் துரைத்தது.

செழுநீர்மதிக்கண்ணிச்சிற்றம்பலவன்றிருக்கழலே
கெழுநீர்மையிற்சென்றுகிண்கிணிவாய்க்கொள்ளுங்கள்ளகத்த
கழுநீர்மலரிவள்யானதன்கண்மருவிப்பிரியாக்
கொழுநீர்நறப்பருகும்பெருநீர்மையளிகுலமே. (கஉ௩)

## ஆயத்துய்த்தல்.

கூ. பே. அடியார்கூட்டத் தன்பாலுய்த்தது.

கூ. சி. கனைகடலன்ன கார்மயிற்கணத்துப்
புனைமடமானைப் புகவிட்டது.

கொழுந்தாரகைமுகைகொண்டலம்பாசடைவிண்மடுவி
லெழுந்தார்மதிக்கமலம்மெழிறந்தெனவிப்பிறப்பி
லழுந்தாவகையெனையாண்டவன்சிற்றம்பலமனையாய்
செழுந்தாதவிழ்பொழிலாயத்துச்சேர்கதிருத்தகவே. (கஉ௪)

## தோழிவந்துகூடல்.

௧௦. பே. அருள்சிவங்கலந்த வபேதங்கண்டது.

௧௦. சி. நெறியுறுகுழலியை நின்றிடத்துய்த்துப்
பிறைநுதற்பாங்கி பெயர்ந்தவட்குரைத்தது.

பொன்னனையான்றில்லைப்பொங்கரவம்புன்சடைமிடைந்த
மின்னனையானருண்மேவலர்போன்மெல்விரல்வருந்த
மென்னனையாய்மறியேபறியேல்வெறியார்மலர்க
ளின்னனயான்கொணர்ந்தேன்மணந்தாழ்குழற்கேய்வனவே. (௧௨௫)

## ஆடிடம்புகுதல்.

௧௧. பே. அன்பர்க்கின்ப மருளேயாக்கல்.

௧௧. சி. தனிவிளையாடிய தாழ்குழற்றோழி
பனிமதிநுதலியொ டாடிடம்படர்ந்தது.

அறுகாணிறைமலரைம்பாணிறையணிந்தேனணியார்
துறுகான்மலர்த்தொத்துத்தோகைதொல்லாயமெல்லப்புகுக
சிறுகான்மருங்குல்வருந்தாவகைமிகவென்சிரத்தி
னுறுகால்பிறர்க்கரியோன்புலியூரன்னவொண்ணுதலே. (௧௨௬)

## தனிகண்டுரைத்தல்.

௧௨. பே. அருளுயிர்தனைக்கண் டகமகிழ்ந்துரைத்தது.

௧௨. சி. வேயொத்ததோளியை யாயத்துய்த்துக்
குனிசிலையண்ணலைத் தனிகண்டுரைத்தது.

தழங்குமருவியெஞ்சீறூர்பெருமவிதுமதுவுங்
கிழங்குமருந்தியிருந்தெம்மொடின்றுகிளர்ந்துகுன்றர்
முழங்குங்குரவையிரவிற்கண்டேகுகமுத்தன்முத்தி
வழங்கும்பிரானெரியாடிதென்றில்லைமணிநகர்க்கே. (௧௨௭)

பருவங்கூறிவரவுவிலக்கல்.

கங. பே. அருள்சிவத்தின்படுத் தறிவுறுத்தியது.

கங. சி. மாந்தளிர்மேனியை வரைந்தெய்தா
தேந்தலிவ்வா றியங்கலென்றது.

தள்ளிமணிசந்தமுந்தித்தறுகட்கரிமருப்புத்
தெள்ளிநறவந்திசைதிசைபாயுமலைச்சிலம்பா
வெள்ளிமலையன்னமால்விடையோன்புலியூர்விளங்கும்
வள்ளிமருங்குல்வருத்துவபோன்றவனமுலையே. (கஉஅ)

வரைவுடம்படாதுமிகுத்துக்கூறல்.

கச. பே. இன்பமெளியேற் கெய்துமோவென்றது.

கச. சி. வரைவுகடாய வாணுதற்றோழிக்கு
விரைமலர்த்தாரோன் மிகுத்துரைத்தது.

மாடஞ்செய்பொன்னகருந்நிகரில்லையிம்மாதர்க்கென்னப்
பீடஞ்செய்தாமரையோன்பெற்றபிள்ளையையுள்ளல்லரைக்
கீடஞ்செய்தென்பிறப்புக்கெடத்தில்லைநின்றோன்கயிலைக்
கூடஞ்செய்சாரற்கொடிச்சியென்றோநின்றுகூறுவதே. (கஉகூ)

உண்மைகூறிவரைவுகடாதல்.

கரு. பே. அன்புக்கருளு மின்பெளிதென்றது.

கரு. சி. கல்வரைநாட னில்லதுரைப்ப
ஆங்கவளுண்மை பாங்கிபகர்ந்தது.

வேய்தந்தவெண்முத்தஞ்சிந்துபைங்கார்வரைமீன்பரப்பிச்
சேய்தந்தவானகமானுஞ்சிலம்பதன்சேவடிக்கே
யாய்தந்தவன்புதந்தாட்கொண்டவம்பலவன்மலையிற்
றாய்தந்தைகானவரேனலெங்காவலித்தாழ்வரையே. (கங0)

வருத்தங்கூறிவரைவுகடாதல்.

௪௬. பே. இன்புறுதிருத்த லென்பிழையென்றது.

௧௬. சி. கனங்குழைமுகத்தவண் மனங்குழைவுணர்த்தி
நிரைவளைத்தோளி வரைவுகடாயது.

மன்னுந்திருவருந்தும்வரையாவிடினீர்வரைவென்
றுன்னுமதற்குத்தளர்ந்தொளிவாடுதிரும்பரெலாம்
பன்னும்புகழ்ப்பரமன்பரஞ்சோதிசிற்றம்பலத்தான்
பொன்னங்கழல்வழுத்தார்புலனென்னப்புலம்புவனே. (௧௩௧)

தாயச்சங்கூறிவரைவுகடாதல்.

௧௭. பே. பரையுமுயிரின் பக்குவங்கண்டது.

௧௭. சி. மடத்தகைமாதர்க் கடுப்பனவறியா
வேற்கட்பாங்கி யேற்கவுரைத்தது.

பனித்துண்டஞ்சூடும்படர்சடையம்பலவன்னுலகந்
தனித்துண்டவன்றொழுந்தாளோன்கயிலைப்பயில்சிலம்பா
கனித்தொண்டைவாய்ச்சிகதிர்முலைப்பாரிப்புக்கண்டழிவுற்
றினிக்கண்டிலம்பற்றுச்சிற்றிடைக்கென்றஞ்சுமெம்மனையே. (௧௩௨)

இற்செறிவறிவித்துவரைவுகடாதல்.

௧அ. பே. அருளினிலின்ப மரிதென்விரைதல்.

௧அ. சி. விற்செறி நுதலியை
இச்செறி வுரைத்தது.

ஈவிளையாடநறவிளைவோர்ந்தெமர்மால்பியற்றும்
வேய்விளையாடும்வெற்பாவுற்றுநோக்கியெம்மெல்லியலைப்
போய்விளையாடலென்றாளன்னையம்பலத்தான்புரத்திற்
றீவிளையாடநின்றேவிளையாடிதிருமலைக்கே. (௧௩௩)

தமர்நினைவுரைத்துவரைவுகடாதல்.

ககூ. பே. இன்பம்பெருவிடி லிகழுமுலகென்றது.
ககூ. சி. விற்செறிநுதலியை யிற்செறிவிப்பரென்
றொளிவேலவற்கு வெளியேயுரைத்தது.

சுற்றுஞ்சடைக்கற்றைச்சிற்றம்பலவற்றொழாதுதொல்சீர்
கற்றுமறியலரிற்சிலம்பாவிடைநைவதுகண்
டெற்றுந்திரையின்னமிர்தையினித்தமரிற்செறிப்பார்
மற்றுஞ்சிலபலசீறூர்பகர்பெருவார்த்தைகளே. (கரு௬)

எதிர்கோள்கூறிவரைவுகடாதல்.

உ0. பே. திரோதையும்பரையுஞ் சேர்த்திடுமென்றது.
உ0. சி. ஏந்திழைத்தோழி யேந்தலைமுன்னிக்
கடியாமாறு நொடிகென்றது.

வழியுமதுவன்னையென்னின்மகிழும்வந்தெந்தையுநின்
மொழியின்வழிநிற்குஞ்சுற்றமுன்னேவயமம்பலத்துக்
குழியும்பரேத்துமெங்கூத்தன்குற்றாலமுற்றும்மறியக்
கெழியும்மவேபணைத்தோள்பலவென்னேகிளக்கின்றதே. (கரு௫)

ஏறுகோள்கூறிவரைவுகடாதல்.

உக. பே. அன்புபுரிபவர்க் கின்பெளிதென்றது.
உக. சி. என்னையர் துணி
வின்ன தென்றது.

படையார்கருங்கண்ணிவண்ணப்பயோதரப்பாரமுநுண்,
ணிடையார்மெலிவுங்கண்டண்டர்களீர்முல்லைவேலியெம்மூர்
விடையார்மருப்புத்திருத்திவிட்டார்வியன்றென்புலியூ
ருடையார்கடவிவருவதுபோலுமுருவினதே. (கருசா)

அயலுரையுரைத்துவரைவுகடாதல்.

உஉ. பே. அடியாரின்பே யார்வாரென்றது.

உஉ. சி. கயல்புரை கண்ணியை
யயலுரை யுரைத்தது.

உருப்பனையன்னகைக்குன்ருென்றுரித்தூரவூரெரித்த
நெருப்பனையம்பலத்தாதியையும்பர்சென்றேத்திநிற்குந்
திருப்பனையூரனையாளைப்பொன்னுளைப்புனைதல்செப்பிற்
பொருப்பனைமுன்னின்றென்னுேவினையேன்யான்புகல்வதுவே. ()

தினைமுதிர்வுரைத்துவரைவுகடாதல்.

உரு. பே. பணியொழிந்தாற்சிவம் பலியாதென்றது.

உரு. சி. ஏனல்விளையாட் டினியில்லையென
மானற்ருேழி மடந்தைக்குரைத்தது.

மாதிடங்கொண்டம்பலத்துநின்ருேன்வடவான்கயிலைப்
போதிடங்கொண்டபொன்வேங்கைதினைப்புனங்கொய்கவென்று
தாதிடங்கொண்டுபொன்வீசித்தன்கள்வாய்சொரியநின்று
சோதிடங்கொண்டிதெம்மைக்கெடுவித்ததுதூமொழியே. (கரு அ)

பகல்வரல்விலக்கிவரைவுகடாதல்.

உச. பே. பசுகரணத்தாற் பலியாதென்றது.

உச. சி. அகல்வரை நாடனைப்
பகல்வர லென்றது.

வடிவார்வயற்றில்லையோன்மலயத்துநின்றும்வருதேன்
கடிவார்களிவண்டுநின்றலர்தூற்றப்பெருங்கணியார்
நொடிவார்நமக்கினிநோதகயானுமக்கென்னுரைக்கேன்
றடிவார்தினையெமர்காவேம்பெருமவித்தண்புனமே. (கருகூ)

தினையொடுவெறுத்துவரைவுகடாதல்.

உரு. பே. தவங்கள்செய்துஞ் சலிப்பிலையென்றது.

உரு. சி. தண்புனத்தோடு தளர்வுற்றுப்
பண்புனைமொழிப் பாங்கிபகர்ந்தது.

நினைவித்துத்தன்னையென்னெஞ்சத்திருந்தம்பலத்துநின்று
புனைவித்தவீசன்பொதியின்மலைப்பொருப்பன்விருப்பிற்
றினைவித்திக்காத்துச்சிறந்துநின்றேமுக்குச்சென்றுசென்று
வினைவித்திக்காத்துவிளைவுண்டதாகிவிளைந்ததுவே. (கசா0)

வேங்கையொடுவெறுத்துவரைவுகடாதல்.

உசு. பே. பசுகரணங்களே பகையாமென்றது.

உசு. சி. நீங்குகவினி நெடுந்தகையென
வேங்கைமேல்வைத்து விளம்பியது.

கனைகடற்செய்தநஞ்சுண்டுகண்டார்க்கம்பலத்தமிழ்தாய்
வினைகெடச்செய்தவன்விண்டோய்கயிலைமயிலனையாய்
நனைகெடச்செய்தனமாயினமைக்கெடச்செய்திடுவான்
றினைகெடச்செய்திடுமாறுமுண்டோவித்திருக்கணியே. (கசக)

இரக்கமுற்றுவரைவுகடாதல்.

உஎ. பே. அருளுயிர்க்கிரங்கி யன்புடுத்துரைத்தது.

உஎ. சி. செழுமலை நாடற்குக்
கழுமலுற் றிரங்கியது.

வழுவாவியலெம்மலையர்விதைப்பமற்றியாம்வளர்த்த
கொழுவார்தினையின்குழாங்களெல்லாமெங்குழாம்வணங்குஞ்
செழுவார்கழற்றில்லைச்சிற்றம்பலவரைச்சென்றுநின்று
தொழுவார்வினைநிற்கிலேநிற்பதாவதித்தொல்புனத்தே. (கசஉ)

கொய்தமைகூறிவரைவுகடாதல்.

உ௮. பே. சரியையாதி மூன்றுங்கடந்தது.

உ௮. சி. நீடிரும்புனத்தினி யாடேமென்று
வரைவுதோன்ற வுரைசெய்தது.

பொருப்பர்க்கியாமொன்றுமாட்டேம்புகலப்புகலெமக்காம்
விருப்பர்க்கியாவர்க்குமேலர்க்குமேல்வருமூரெரித்த
நெருப்பர்க்குநீடம்பலவருக்கன்பர்குலநிலத்துக்
கருப்பற்றுவிட்டெனக்கொய்தற்றதின்றிக்கடிப்புனமே. (௧௪௩)

பிரிவருமைகூறிவரைவுகடாதல்.

உ௯. பே. பழக்கந்தவிரப் பயிறல்பெரிதென்றது.

உ௯. சி. மறைப்புறக் கிளவியிற்
சிறைப்புறத் துரைத்தது.

பரிவுசெய்தாண்டம்பலத்துப்பயில்வோன்பரங்குன்றின்வா
யருவிசெய்தாழ்புனத்தைவனங்கொய்யவுமிவ்வனத்தே
பிரிவுசெய்தாலரிதேகொள்கபேயொடுமென்னும்பெற்றி
யிருவிசெய்தாளினிருந்தின்றுகாட்டுமிளங்கிளியே. (௧௪௪)

மயிலொடுகூறிவரைவுகடாதல்.

௩௦. பே. அருள்கரணத்தி லார்ந்தினிதுரைத்தது.

௩௦. சி. நீங்கரும்புனம்விடு நீள்பெருந்துயரம்
பாங்கிபகர்ந்து பருவரலுற்றது.

கணியார்கருத்தின்றுமுற்றிற்றியாஞ்சென்றுங்கார்ப்புனமே
மணியார்பொழில்காண்மறத்திர்கண்டீர்மன்னுமம்பலத்தோ
னணியார்கயிலைமயில்காளயில்வேலொருவர்வந்தாற்
றுணியாதனதுணிந்தாரென்னுநீர்மைகள்சொல்லுமினே. (௧௪௫)

வறும்புனங்கண்டுவருந்தல்.

௩க. பே. அருளன்றியின்ப மாராதென்றது.

௩க. சி. மென்புனம்விடுத்து மெல்லியல்செல்ல
மின்பொலிவேலோன் மெலிவுற்றது.

பொதுவினிற்றீர்த்தென்னையாண்டோன்புலியூரரன்பொருப்பே
யிதுவெனிலென்னின்றிருக்கின்றவாறெம்மிரும்பொழிலே
யெதுநமக்கெய்தியதென்னுற்றனிரறையீண்டருவி
மதுவினிற்கைப்புவைத்தாலொத்தவாமற்றிவ்வான்புனமே. (கசசு)

பதிநோக்கிவருந்தல்.

௩உ. பே. இன்பப்பெருமைகண் டெளிமையன்றென்றது.

௩உ. சி. மதிநுதலரிவை பதிபுகலரிதென
மதிநனிகலங்கிப் பதிமிகவாடியது.

ஆனந்தமாக்கடலாடுசிற்றம்பலமன்னபொன்னின்
றேனுந்துமாமலைச்சிறூரிதுசெய்யலாவதில்லை
வானுந்துமாமதிவேண்டியழுமழப்போலுமன்றோ
நானுந்தளர்ந்தனனீயுந்தளர்ந்தனைநன்னெஞ்சமே. (கசஎ)

---

## கச. இரவுக்குறி.

இரவுக்குறியாவது அருளேசிவத்தோ டாக்கியவ்வருமை கருணை பலவு மெடுத்துக் காட்டியது. இது முப்பத்துமூன்று துறையுடைத்து. அவை வருமாறு:—

இரவுக்குறிவேண்ட லாற்றருமைகூற
னின்றுநெஞ்சுடைத னிலைகண்டுநேர்த
லுட்கோள்வினைத லுட்கொண்டுவினைதல்
குறியிடங்கூறல் குறியேற்பித்த
லிரவாவுரைத்த லேதங்கூறல்

குறைநேர்தலோடு குறைநயப்புரைத்தன்
மயின்மேலிசைத்து வரவுணர்ந்துரைத்த
ருய்துயிலறித றலைவிதுயிலெடுத்த
லிடத்துய்த்துநீங்க றளர்வகன்றுரைத்தன்
மருங்கணைதலோடு முகங்கண்டுமகிழ்தல்
பள்ளியிடத்துய்த்தல் பள்ளியிடத்துய்த்து
வரைவுகடாவி வரவுவிலக்கல்
வரைவுடம்படா தாற்றுதுரைத்த
லதரிடைச்செலவிற் கிரக்கங்கூற
லிருளறநிலவு வெளிப்படவருந்தல்
வேற்றுக்குறிகூறல் கடலிடைவைத்துத்
துயரறிவித்த றோழியுமின்றித்
தானேகிடந்து தனிமையுற்றுற்றுங்
காமமிக்க கழிபடர்கிளவி
காப்புச்சிறைமிக்க கையறுகிளவி
யாறுபார்த்துற்ற வச்சக்கிளவி
தன்னுட்கையா றெய்திடுகிளவி
நிலைகண்டுரைத்த னெடுங்கடற்சேர்த்த
லலரறிவித்தலோ டாறைம்மூன்று
மிரவுக்குறியிவை யென்றிசினோரே.

இரவுக்குறிவேண்டல்.

க. பே. அருளையிரந்துயி ரன்பாய்க்கலந்தது.

க. சி. நள்ளிருட்குறியை வள்ளணிலைந்து
வீங்குமென்முலைப் பாங்கிக்குரைத்தது.

மருந்துநம்மல்லற்பிறவிப்பிணிக்கம்பலத்தமிர்தா
யிருந்தனர்குன்றினின்றேங்குமருவிசென்றேர்திகழப்
பொருந்தினமேகம்புதைந்திருடேங்கும்புனையிறும்பின்
விருந்தினன்யானுங்கள்சீறூரதனுக்குவெள்வளையே. (கசஅ)

வழியருமைகூறிமறுத்தல்.

உ. பே. அருளுயிர்ப்போத மகறல்கண் டின்புறல்.

உ. சி. இரவரலேந்தல் கருதியுரைப்பப்
பருவரற்பாங்கி யருமையுரைத்தது.

விசும்பினுக்கேணிநெறியன்னசின்னெறிமேன்மழைதூங்
கசும்பினிற்றுன்னியளைநுழைந்தாலொக்குமையமெய்யே
யிசும்பினிற்சிந்தைக்குமேறற்கரிதெழிலம்பலத்துப்
பசும்பணிக்கோடுமிலைந்தான்மலயத்தெம்வாழ்பதியே. (கசகூ)

நின்றுநெஞ்சுடைதல்.

ஙு. பே. இன்பங்கிடைக்குமோ வென்றுநெஞ்சுடைந்தது.

ஙு. சி. பாங்கிவிலங்கப் பருவரைநாட
னீங்கிவிலங்காது நெஞ்சுடைந்தது.

மாற்றேனெனவந்தகாலனையோலமிடவடர்த்த
கோற்றேன்குளிர்தில்லைக்கூத்தன்கொடுங்குன்றினீள்குடுமி
மேற்றேன்விரும்புமுடவனைப்போலமெலியுநெஞ்சே
யாற்றேனரியவரிவைக்குநீவைத்தவன்பினுக்கே. (கடுo)

இரவுக்குறிநேர்தல்.

ச. பே. உயிர்ப்பரிவருள்கண் டுவந்தியம்பியது.

ச. சி. தடவரைநாடன் றளர்வுதீர
மடநடைப்பாங்கி வகுத்துரைத்தது.

கூளிநிரைக்கநின்றம்பலத்தாடிகுரைகழற்கீழ்த்
தூளிநிரைத்தசுடர்முடியோயிவடோணசையா
லாளிநிரைத்தடலானைகடேருமிரவில்வந்து
மீளியுரைத்திவினையேனுரைப்பதென்மெல்லியற்கே. (கடுக)

## உட்கோள்வினுதல்.

ரு. பே. அருளுயிர்கண்ட வனுபவங்கேட்டது.

ரு. சி. நெறிவிலக்குற்றவ னுறுதுயர்நோக்கி
யாங்கொருசூழல் பாங்கிபகர்ந்தது.

வரையன்றொருகாலிருகால்வளையநிமிர்த்துவட்கார்
நிரையன்றழலெழவெய்துநின்றோன்றில்லையன்னநின்னூர்
விரையென்னமென்னிழலென்னவெறியுறுதாதிவர்போ
துரையென்னவோசிலம்பாநலம்பாவியொளிர்வனவே. (கருஉ)

## உட்கொண்டுவினுதல்.

சு. பே. அறிவித்தாலறிவனென் றனுபவங்கேட்டது.

சு. சி. தன்னைவினவத் தானவள்குறிப்பறிந்
தென்னைநின்னாட் டியலணியென்றது.

செம்மலராயிரந்தூய்க்கருமாறிருக்கண்ணணியு
மொய்ம்மலரீர்ங்கழலம்பலத்தோன்மன்னுதென்மலயத்
தெம்மலர்சூடிநின்றெச்சாந்தணிந்தென்னநன்னிழல்வா
யம்மலர்வாட்கணல்லாயெல்விவாய்நுமராடுவதே. (கருங)

## குறியிடங்கூறல்.

எ. பே. உயிர்க்கின்பமாமிட மருளெடுத்துரைத்தது.

எ. சி. இரவுக்குறியிவ ணென்றுபாங்கி
அரவக்கழலவற் கறியவுரைத்தது.

பனைவளர்கைம்மாப்படாத்தம்பலத்தரன்பாதம்விண்ணோர்
புனைவளர்சாரற்பொதியின்மலைப்பொலிசந்தணிந்து
சுனைவளர்காவிகள்சூடிப்பைந்தோகைதுயில்பயிலுஞ்
சினைவளர்வேங்கைகள்யாங்கணின்றாடுஞ்செழும்பொழிலே. (கருச)

### இரவுக்குறியேற்பித்தல்.

அ. பே. சிவத்துக்கருளுயிர்ச் செய்கையுரைத்தது.

அ. சி. அரவக்கழலவ னாற்றானென
இரவுக்குறி யேற்பித்தது.

மலவன்குரம்பையைமாற்றியம்மான்முதல்வானர்க்கப்பாற்
செலவன்பர்க்கோக்குஞ்சிவன்றில்லைக்கானலிற்சீர்ப்பெடையோ
டலவன்பயில்வதுகண்டஞர்கூர்ந்தயில்வேலுரவோன்
செலவந்திவாய்க்கண்டனனென்னதாங்கொன்மன்சேர்துயிலே. ()

### இரவரவுரைத்தல்.

கூ. பே. மலத்தடைகடந்துயிர் மருவிற்றென்றது.

கூ. சி. குரவரு குழலிக்
கிரவர வுரைத்தது.

மோட்டங்கதிர்முலைப்பங்குடைத்தில்லைமுன்னோன்கழற்கே
கோட்டந்தருநங்குருமுடிவெற்பன்மழைகுழுமி
நாட்டம்புதைத்தன்னநள்ளிருணகநடுங்கச்சிங்கம்
வேட்டந்திரிசரிவாய்வருவான்சொல்லுமெல்லியலே. (கடுசு)

### ஏதங்கூறிமறுத்தல்.

கo. பே. பரிவுயிரருளிற் படற்கிரங்கியது.

கo. சி. இழுக்கம்பெரி திரவரினென
அழுக்கமெய்தி யரிவையுரைத்தது.

செழுங்கார்முழவதிர்சிற்றம்பலத்துப்பெருந்திருமால்
கொழுங்கான்மலரிடக்கூத்தயர்வோன்கழலேத்தலர்போன்
முழங்காரரிமுரண்வாரணவேட்டைசெய்மொய்யிருள்வாய்
வழங்காவதரின்வழங்கென்றுமோவின்றெம்வள்ளலையே. (கடுள)

குறைநேர்தல்.

கக. பே. திருமேனியருமை தெரிதலாலாமெனல்.
கக. சி. அலைவேலண்ண லிலைமைகேட்டுக்
கொலைவேற்கண்ணி குறைநயந்தது.

ஓங்குமொருவிடமுண்டம்பலத்தும்பருய்யவன்று
தாங்குமொருவன்றடவரைவாய்த்தழங்கும்மருவி
வீங்குஞ்சுனைப்புனல்வீழ்ந்தன்றழுங்கப்பிடித்தெடுத்து
வாங்குமவர்க்கறியேன்சிறியேன்சொல்லும்வாசகமே. (கருஅ)

குறைநேர்ந்தமைகூறல்.

கஉ. பே. உயிர்க்குக்கருணை யுண்மையுரைத்தது.
கஉ. சி. குறைநயந்தன ணெறிகுழலியென
எறிவேலண்ணற் கறியவுரைத்தது.

ஏனற்பசுங்கதிரென்றூழ்க்கழியவெழிலியுன்னிக்
கானக்குறவர்கள்கம்பலைசெய்யும்வம்பார்சிலம்பா
யானிற்றையாமத்துநின்னருண்மேனிற்கனுற்றுச்சென்றேன்
றேனக்கொன்றையன்றில்லையுரூர்செல்லுஞ்செல்லல்களே. (கருகூ)

வரவுணர்ந்துரைத்தல்.

கங. பே. சிவத்துக்கருளுயிர்த் திறமெடுத்துரைத்தல்.
கங. சி. வளமயிலெடுப்ப விளமயிற்பாங்கி
செருவேலண்ணல் வரவுரைத்தது.

முன்னுமொருவரிரும்பொழின்மூன்றற்குமுற்றுமிற்றூற்
பின்னுமொருவர்சிற்றம்பலத்தார்தரும்பேரருள்போற்
றுன்னுமொரின்பமென்றேகைதந்தோகைக்குச்சொல்லுவபோன்
மன்னுமரவத்தவாய்த்துயில்பேருமயிலினமே. (கசூ௦)

### தாய்துயிலறிதல்.

கச. பே. பரைக்கும்பாங்காம் பண்பருள்கண்டது.

கச. சி. ஊசன்மிசைவைத் தொள்ளமளியிற்

றுயத்துயி றுனறிந்தது.

கூடாரரணெரிகூடக்கொடுஞ்சிலைகொண்டவண்டன்
சேடார்மதின்மல்லற்றில்லையன்னுய்சிறுகட்பெருவெண்
கோடார்கரிகுருமாமணியூசலைக்கோப்பழித்துத்
தோடார்மதுமலர்நாகத்தைநூக்குநஞ்சூழ்பொழிற்கே. (கசுக)

### துயிலெடுத்துச்சேறல்.

கரு. பே. உயிர்ப்பக்குவங்கண் டுவந்தறிவித்தது.

கரு. சி. தாய்துயிலறிந் தாய்தருபவண்

மெல்லியற்குச் சொல்லியது.

விண்ணுக்குமேல்வியன்பாதலக்கீழ்விரிநீருடுத்த
மண்ணுக்குநாப்பணயந்துதென்றில்லைநின்றோன்மிடற்றின்
வண்ணக்குவளைமலர்கின்றனசினவாண்மிளிர்நின்
கண்ணெக்குமேற்கண்டுகொண்வண்டுவொழுங்கருங்குழலே. (கசுஉ)

### இடத்துய்த்துநீங்கல்.

கசு. பே. சிவத்திற்சேர்த்தருள் சென்றுநின்றது.

கசு. சி. மைத்தடங்கண்ணியை யுய்த்திடத்தொருபா

னீங்கலுற்ற பாங்கிபகர்ந்தது.

நந்தீவரமென்னுநாரணனுண்மலர்க்கண்ணிற்கெஃகந்
தந்தீவரன்புலியூரனையாய்தடங்கண்கடந்த
விந்தீவரமிவைகாணின்னிருள்சேர்குழற்கெழில்சேர்
சந்தீவரமுறியும்வெறிவீயுந்தருகுவனே. (கசுங)

## தளர்வகன்றுரைத்தல்.

கஎ. பே. உயிர்சிவங்கண்டன் புறவுவந்துரைத்தது.
கஎ. சி. வடுவகிரனைய வரிநெடுங்கண்ணியைத்
தடுவரியன்பொடு தளர்வகன்றுரைத்தது.

காமரைவென்றகண்ணோன்றில்லைப்பல்கதிரோனடைத்த
தாமரையில்லினிதழ்க்கதவந்திறந்தோதமியே
பாமரைமேகலைபற்றிச்சிலம்பொதுக்கிப்பையவே
நாமரையாமத்தென்னோவந்துவைகிநயந்ததுவே. (கசூச)

## மருங்கணைதல்.

கஅ. பே. இன்பக்கனங்கண் டின்பனுபவித்தது.
கஅ. சி. அன்புமிகுதியி னளவளாயவளைப்
பொன்புனைவேலோன் புகழ்ந்துரைத்தது.

அகிலின்புகைவிம்மியாய்மலர்வேய்ந்தஞ்சனமெழுதத்
தகிலுந்தனிவடம்பூட்டத்தகாள்சங்கரன்புலியூ
ரிகலுமவரிற்றளருமித்தேம்பலிடைஞெமியப்
புகிலுமிகவிங்ஙனேயிறுமாக்கும்புணர்முலையே. (கசூரு)

## முகங்கண்டுமகிழ்தல்.

ககூ. பே. திருமேனிகண்டின் பதுவாய்த்தேறியது.
ககூ. சி. முகையவிழ்குழலி முகமதிகண்டு
திகழ்வேலண்ணன் மகிழ்வுற்றது.

அழுந்தேனரகத்தியானென்றிருப்பவந்தாண்டுகொண்ட
செழுந்தேன்றிகழ்பொழிற்றில்லைப்புறவிற்செறுவகத்த
கொழுந்தேன்மலர்வாய்க்குமுதமிவள்யான்குரூஉச்சுடர்கொண்
டெழுந்தாங்கதுமலர்த்தும்முயர்வானத்திளமதியே. (கசூசூ)

## பள்ளியிடத்துய்த்தல்.

உ0. பே. அடியரிடத்தன்பா யமர்தலுயிர்கண்டது.
உ0. சி. பிரிவதுகருதிய பெருவரைநாட
னொள்ளிழைப்பாங்கியொடு பள்ளிகொள்கென்றது.

சுரும்புறுநீலங்கொய்யற்றமிநின்று துயில்பயின்மோ
வரும்பெறற்றோழியொடாயத்துநாப்பணமரரொன்ன
ரிரும்புறுமாமதில்பொன்னிஞ்சிவெள்ளிப்புரிசையன்றோர்
துரும்புறச்செற்றகொற்றத்தெம்பிரான்றில்லைச்சூழ்பொழிற்கே. ()

## வரவுவிலக்கல்.

உக. பே. அருளுயிர்க்குச்சிவத் தருமைகூறியது.
உக. சி. தெய்வமன்னனைத் திருந்தமளிசேர்த்தி
மைவரைநாடனை வரவுவிலக்கியது.

நற்பகற்சோமனெரிதருநாட்டத்தன்றில்லையன்ன
விற்பகைத்தோங்கும்புருவத்திவளின்மெய்யேயெளிதே
வெற்பகச்சோலையின்வேய்வளர்தீச்சென்றுவிண்ணினின்ற
கற்பகச்சோலைகதுவுங்கன்றடவிக்கல்லதரே. (கசுஅ)

## ஆற்றுதுரைத்தல்.

உஉ. பே. இன்பமேயன்றி யுயிரிலையென்றது.
உஉ. சி. வரைவுகடாய வாணுதற்றோழிக்
கருவரைநாடனாற்றுதுரைத்தது.

பைவாயரவரையம்பலத்தெம்பரன்பைங்கயிலைச்
செவ்வாய்க்கருங்கட்பெரும்பணைத்தோட்சிற்றிடைக்கொடியை
மொய்வார்கமலத்துமுற்றிழையின்றெனமுன்னைத்தவத்தா
லிவ்வாறிருக்குமென்றேநிற்பதென்றுமென்னின்னுயிரே. (கசுகூ)

## இரக்கங்கூறிவரைவுகடாதல்.

உகூ. பே. கருணையேயின்பக் கனமெனவுரைத்தது.

உகூ. சி. அதிர்கழலவ னகன்றவழி
யெதிர்வதறியா திரங்கியுரைத்தது.

பைவாயரவுமறியுமழுவும்பயின்மலர்க்கை
மொய்வார்சடைமுடிமுன்னவன்றில்லையின்முன்னினக்காற்
செவ்வாய்கருவயிர்ச்சேர்த்திச்சிறியாள்பெருமலர்க்கண்
மைவார்குவளைவிடுமன்னநீண்முத்தமாலைகளே. (கஎ0)

## நிலவுவெளிப்படவருந்தல்.

உச. பே. உயிர்க்குமாயையு மொளியென்றிரங்கியது.

உச. சி. தனிவேலவர்க்குத் தன்றளர்வறியப்
பணிமதிவிளக்கம் பாங்கிபகர்ந்தது.

நாகந்தொழவெழிலம்பலநண்ணிநடநவில்வோ
ளுகமிதுமதியேமதியேநவில்வேற்கையெங்க
ளாகம்வரவெதிர்நாங்கொள்ளுநள்ளிருள்வாய்நறவார்
நாகமலிபொழில்வாயெழில்வாய்த்தநின்னுயகமே. (கஎக)

## அல்லகுறியறிவித்தல்.

உரு. பே. உன்பரிவின்புக் குருதென்றுரைத்தது.

உரு. சி. வல்லியன்னவ ளல்லகுறிப்பா
டறைப்புனற்றுறைவற்குச் சிறைப்புறத்துரைத்தது.

மின்னங்கலருஞ்சடைமுடியோன்வியன்றில்லையன்ன
யென்னங்கலமரலெய்தியதோவெழின்முத்தந்தொத்திப்
பொன்னங்கலர்புன்னைச்சேக்கையின்வாய்ப்புலம்புற்றுமுற்று
மன்னம்புலருமளவுந்துயிலாதழுங்கினவே. (கஎஉ)

கடலிடைவைத்துத்துயரறிவித்தல்.

உசு. பே. அருளுயிர்மோகங் கடலொடியம்பியது.

உசு. சி. எறிகடன்மேல்வைத் திரவருதுயரம்
அறைகழலவற் கறியவுரைத்தது.

சோத்துன்னடியமென்றோரைக்குழுமித்தொல்வானவர்சூழ்ந்
தேத்தும்படிநிற்பவன்றில்லையன்னாளிவடுவள
வார்த்துன்னமிழ்துந்திருவுமதியுமிழந்தவநீ
பேர்த்துமிரைப்பொழியாய்பழிநோக்காய்பெருங்கடலே. (களங)

காமமிக்ககழிபடர்கிளவி.

உள. பே. உயிர்மோகங்கண்டருளுவகையொடியம்பியது.

உள. சி. தாமமிக்க தாழ்குழலேழை
காமமிக்க கழிபடர்கிளவி.

மாதுற்றமேனிவரையுற்றவில்லிதில்லைநகர்சூழ்
போதுற்றபூம்பொழில்காள்கழிகாளெழிற்புள்ளினங்கா
ளேதுற்றழிதியென்னீர்மன்னுமீர்ந்துறைவர்க்கிவளோ
தீதுற்றதென்னுக்கென்னீரிதுவோநன்மைசெப்புமினே. (களச)

காப்புச்சிறைமிக்ககையறுகிளவி.

உஅ. பே. உயிர்பெறுமோக முறவற்றியம்பியது.

உஅ. சி. மெய்யுறு காவலிற்
கையறு கிளவி.

இன்னறவார்பொழிற்றில்லைநகரிறைசீர்விழவிற்
பன்னிறமாலைத்தொகைபகலாம்பல்விளக்கிருளின்
றுன்னற்வுய்க்குமில்லோருந்துயிலிற்றுறைவர்மிக்க
கொன்னிறவேலொடுவந்திடின்ஞாளிகுரைதருமே. (களரு)

ஆறுபார்த்துற்றவச்சக்கிளவி.

உகூ. பே. இன்பத்தின்வழி யேகவரிதென்றது.

உகூ. சி. நாறுவார்குழ னவ்விநோக்கி
யாறுபார்த்துற்ற வச்சக்கிளவி.

தாருறுகொன்றையன்றில்லைச்சடைமுடியோன்கயிலை
நீருறுகான்யாறளவிலநீந்திவந்தானினது
போருறுவேல்வயப்பொங்குருமஞ்சுகமஞ்சிவருஞ்
சூருறுசோலையின்வாய்வரற்பாற்றன்று தூங்கிருளே. (களசு)

தன்னுட்கையாறெய்திடுகிளவி.

ஙo. பே. சிவத்தின்கருணைத் திறம்பரிவானது.

ஙo. சி. மின்னுப்புரையு மாநுண்மருங்கு
றன்னுட்கையா றெய்திடுகிளவி.

விண்டலையாவர்க்கும்வேந்தர்வண்டில்லைமெல்லங்கழிசூழ்
கண்டலையேகரியாக்கன்னிப்புன்னைக்கலந்தகள்வர்
கண்டிலையேவரக்கங்குலெல்லாமங்குல்வாய்விளக்கு
மண்டலமேபணியாய்தமியேற்கொருவாசகமே. (களள)

நிலைகண்டுரைத்தல்.

ஙக. பே. அருளேயுயிர்க்குப் பரிவாயுரைத்தது.

ஙக. சி. நின்னினழிந்தனண் மின்னிடைமாதென
வரைவுதோன்ற வுரைசெய்தது.

பற்றொன்றிலார்பற்றுந்தில்லைப்பரன்பரங்குன்றினின்ற
புற்றொன்றரவன்புதல்வனெனநீபுகுந்துநின்றான்
மற்றுன்றுமாமலரிட்டுன்னைவாழ்த்திவந்தித்தலன்றி
மற்றொன்றுசிந்திப்பரேல்வல்லளோமங்கைவாழ்வகையே. (களஅ)

இரவுறுதுயரங்கடலொடுசேர்த்தல்.

௩உ. பே. கருணையாற்சிவமே யுயிர்போற்கனிந்தது.
௩உ. சி. எறிவேற்கண்ணி யிரவருதுயரஞ்
செறிகடலிடைச் சேர்த்தியுரைத்தது.

பூங்கணைவேளைப்பொடியாய்விழவிழித்தோன்புலியூ
ரோங்கணைமேவிப்புரண்டுவிழுந்தெழுந்தோலமிட்டுத்
தீங்கணைந்தோரல்லுந்தேறாய்கலங்கிச்செறிகடலே
யாங்கணைந்தார்நின்னையுமுளரோசென்றகன்றவரே. (கஎகூ)

அலரறிவுறுத்தல்.

௩௩. பே. அருளுயிர்க்கின்பம் பெறவுறுத்தியது.
௩௩. சி. அலைவேலண்ணன் மனமகிழருள்
பலராலறியப் பட்டதென்றது.

அலராயிரந்தந்துவந்தித்துமாலாயிரங்கரத்தா
லலரார்கழல்வழிபாடுசெய்தாற்களவில்லொளிகொ
ளலராவிருக்கும்படைகொடுத்தோன்றில்லையானருள்போன்
றலராய்விளைகின்றதம்பல்கைம்மிக்கையமெய்யருளே. (கஅ0)

---

## ௧ரு. ஒருவழித்தணத்தல்.

ஒருவழித்தணத்தலாவது சிவனதுகருணை யருடெரிவித்தது. இது பதின்மூன்று துறையுடைத்து. அவை வருமாறு:—

அகன்றணைவுகூற லாழியொடு கேட்ட
லாழியொடுபுலத்த லன்னமோடாய்த
லாழிக்குரைத்த லாழியிழைத்தல்
சுடரொடுபுலம்பல் பொழுதுகண்டுமயங்கல்
பையுளெய்தல் பரிவுற்றுரைத்த
லன்னமோடழிதல் வரவுணர்ந்துரைத்தல்

வருத்தங்கூறல் வருபதின்மூன்றுந்
திருத்தியவொருவழித் திறனாகும்மே.

அகன்றணைவுகூறல்.

க. பே. பிரிந்துகூடிப் பெறுமின்பென்றது.

க. சி. வழிவேறு படமன்னும்
பழிவேறு படுமென்றது.

புகழும்பழியும்பெருக்கிற்பெருகும்பெருகிநின்று
நிகழுநிகழாநிகழ்த்தினல்லாலிதுநீநினைப்பி
னகழுமதிலுமணிதில்லையோனடிப்போதுசென்னித்
திகழுமவர்செல்லல்போலில்லையாம்பழிசின்மொழிக்கே. (கஅக)

கடலொடுவெர்வுகேட்டல்.

உ. பே. உயிராய்ச்சிவமே யுற்றுற்றுரைத்தது.

உ. சி. மணந்தவரொருவழித் தணந்ததற்கிரங்கி
மறிதிரைசேரு மெறிகடற்கியம்பியது.

ஆரம்பரந்துதிரைபொருநீர்முகின்மீன்பரப்பிச்
சீரம்பரத்திற்றிகழ்ந்தொளிதோன்றுந்துறைவர்சென்றூர்
போரும்பரிசுபுகன்றனரோபுலியூர்ப்புனிதன்
சீரம்பர்சுற்றியெற்றிச்சிறந்தார்க்குஞ்செறிகடலே. (கஅஉ)

கடலொடுபுலத்தல்.

ங. பே. பின்னுமுயிராய் மன்னியுரைத்தது.

ங. சி. செறிவளைச் சின்மொழி
யெறிகடற் கியம்பியது.

பாணிகர்வண்டினம்பாடப்பைம்பொன்றருவெண்கிழிதஞ்
சேணிகர்காவின்வழங்கும்புன்னைத்துறைச்சேர்ப்பர்திங்கள்
வாணிகர்வெள்வளைகொண்டகன்றூர்திறம்வாய்திறவாய்
பூணிகர்வாளரவன்புலியூர்சுற்றும்போர்க்கடலே. (கஅங)

அன்னமோடாய்தல்.

ச. பே. பின்னுமுயிர்போன் மன்னியுரைத்தது.
ச. சி. மின்னிடை மடந்தை
யன்னமோ டாய்ந்தது.

பகன்றாமரைக்கண்கெடக்கடந்தோன்புலியூர்ப்பழனத்
தகன்றாமரையன்னமேவண்டுநீலமணியணிந்து
முகன்றாழ்குழைச்செம்பொன்முத்தணிபுன்னையின்னும்முரையா
தகன்றாரகன்றேயொழிவர்கொல்லோநம்மகன்றுறையே. (கஅச)

தேர்வழிநோக்கிக்கடலொடுகூறல்.

ரு. பே. சிவனுயிர்மோகஞ் சென்றியம்பியது.
ரு. சி. மீன்றோய் துறைவர் மீளுமளவு
மான்றேர்வழியை யழியேலென்றது.

உள்ளுமுருகியுரோமஞ்சிலிர்ப்பவுடையவனுட்
கொள்ளுமவரிலொர்கூட்டந்தான்குனிக்கும்புலியூர்
விள்ளும்பரிசுசென்றார்வியன்றேர்வழிதூரற்கண்டாய்
புள்ளுந்திரையும்பொரச்சங்கமார்க்கும்பொருகடலே. (கஅரு)

கூடலிழைத்தல்.

சூ. பே. உயிர்த்தொழில்சிவமா யுறுங்குறிபார்த்தது.
சூ. சி. நீடலங் துறையிற்
கூட லிழைத்தது.

ஆழிதிருத்தும்புலியூருடையானருளினளித்
தாழிதிருத்துமணற்குன்றிணீத்தகன்றார்வருகென்
றாழிதிருத்திச்சுழிக்கணக்கோதிநையாமலைய
வாழிதிருத்தித்தரக்கிற்றியோவுள்ளம்வள்ளலையே. (கஅசூ)

## சுடரொடுபுலம்பல்.

எ. பே. இன்பேயுயிரா யிடருற்றியம்பியது.

எ. சி. குணகடலெழுசுடர் குடகடற்குளிப்ப
மணமலிகுழலி மனம்புலம்பியது.

கார்த்தரங்கந்திரைதோணிசுறாக்கடன்மீனெறிவோர்
போர்த்தரங்கந்துறைமானுந்துறைவர்தம்போக்குமிக்க
சீர்த்தரங்கன்றில்லைப்பல்பூம்பொழிற்செப்பும்வஞ்சினமு
மார்த்தரங்கஞ்செய்யுமாலுய்யுமாறென்கொலாழ்சுடரே. (கஅஎ)

## பொழுதுகண்டுமயங்கல்.

அ. பே. பருவநோக்கிப் பரிவின்புற்றது.

அ. சி. மயறருமாலை வருவதுகண்டு
கயறருகண்ணி கவலையுற்றது.

பகலோன்கரந்தனன்காப்பவர்சேயர்பற்றற்றவர்க்குப்
புகலோன்புகுநர்க்குப்போக்கரியோனெவரும்புகலத்
தகலோன்பயிறில்லைப்பைம்பொழிற்சேக்கைகணோக்கினவா
லகலோங்கிருங்கழிவாய்க்கொழுமீனுண்டவன்னங்களே. (கஅஅ)

## பறவையொடுவருந்தல்.

கூ. பே. இன்பருணோக்க மெங்குமானது.

கூ. சி. செறிபிணிகம்மிகச் சிற்றிடைப்பேதை
பறவைமேல்வைத்துப் பையுளெய்தியது.

பொன்னுமணியும்பவளமும்போன்றுபொலிந்திலங்கி
மின்னுஞ்சடையோன்புலியூர்விரவாதவரினுண்ணோ
யின்னுமறிகிலவாலென்னைபாவமிருங்கழிவாய்
மன்னும்பகலேமகிழ்ந்திரைதேரும்வண்டானங்களே. (கஅகூ)

பங்கயத்தோடுபரிவுற்றுரைத்தல்.

கO. பே. இன்புற்றிடநோக்கி யன்புற்றிரங்கியது.

கO. சி. முருகவிழ் கான
லொடுபரி வுற்றது.

கருங்கழிகாதற்பைங்கானலிற்றில்லையெங்கண்டர்விண்டா
ரொருங்கழிகாதரமூவெயில்செற்றவொற்றைச்சிலைசூழ்ந்
தருங்கழிகாதமகலுமென்றாழென்றலந்துகண்ணீர்
வருங்கழிகாதல்வனசங்கள்கூப்புமலர்க்கைகளே. (ககூO)

அன்னமோடழிதல்.

கக. பே. இன்பமுயிர்க்கா யெடுத்திரங்கியது.

கக. சி. இன்னகையவ ளிரவருதுயர
மன்னத்தோ டழிந்துரைத்தது.

மூவறழீஇயவருண்முதலோன்றில்லைச்செல்வன்முந்நீர்
நாவறழீஇயவிந்நானிலந்துஞ்சுநயந்தவின்பச்
சேவறழீஇச்சென்றுதான்றுஞ்சும்யான்றுயிலாச்செயிரெங்
காவறழீஇயவர்க்கோதாதளியகளியன்னமே. (ககூக)

வரவுணர்ந்துரைத்தல்.

கஉ. பே. அருளேசென்றங் கரற்கியம்பியது.

கஉ. சி. சென்றவர்வரவுணர்ந்து நின்றவணிலைமை
சிறப்புடைப்பாங்கி சிறைப்புறத்துரைத்தது.

நில்லாவளைநெஞ்சநெக்குருகுந்நெடுங்கண்டுயிலக்
கல்லாகதிர்முத்தங்காற்றுமெனக்கட்டுரைக்கதில்லைத்
தொல்லோனருள்களில்லாரிற்சென்றூர்சென்றசெல்லல்கண்டா
யெல்லார்மதியேயிதுநின்னையானின்றிரக்கின்றதே. (ககூஉ)

வருத்தமிகுதிகூறல்.

கரு. பே. சிவனதுகருணையி னளவெடுத்துரைத்தது.

கரு. சி. நீங்கி யணைந்தவற்குப்
பாங்கி பகர்ந்தது.

வளருங்கறியறியாமந்திதின்றுமம்மர்க்கிடமாய்த்
தளருந்தடவரைத்தண்சிலம்பாதனதங்கமெங்கும்
விளரும்விழுமெழும்விம்முமெலியும்வெண்மாமதிநின்
றொளிருஞ்சடைமுடியோன்புலியூரன்னவொண்ணுதலே. (கக௬)

## கசு. உடன்போக்கு.

உடன்போக்காவது அருளுயிர்க்கருமை யறியவுரைத்தலு மானந்தத்திடை யழுத்துவித்தலும். இது ஐம்பத்தாறு துறையுடைத்து. அவை வருமாறு:—

பருவங்கூறல் படைத்துமொழிதல்லொடு
மருவமர்கோதையை மகட்பேச்சுரைத்தல்
பொன்னணிவுரைத்தல் பொருள்விலைகூற
லன்னமென்னடையா ளருமைகேட்டழித
றளர்வறிந்துரைத்த றாழ்குழலாட
னுளநினைவுரைத்த லுடன்கொண்டுசேறற்
கருமையுரைத்த லாதரங்கூறன்
மருவியதடங்கயல் வாழாளென்றல்
பொருவருகற்பின் புனைநலனுரைத்த
றுணிந்தமைகூற றுணிவுகேட்ட
றுணிவறிவித்த றொல்லைநாண்விட
றுணிவெடுத்துரைத்தல்கொண் டகலெனவுரைத்த

லடிவழிநினைந்துநின் றவனுளம்வாடல்
கொடியிடையாளைக் கொண்டுசென் றுய்த்த
லோம்படுத்துரைத்தல் வழிப்படுத்துரைத்த
றேம்படுகோதையைத் திறலடுவேலோன்
பையக்கொண்டேகல் பயங்கெடவுரைத்தன்
மையமர்கண்ணியை வழியயர்வகற்ற
னெறிவிலக்கல்லொடு நெறியிடைக்கண்டவர்
செறிவெடுத்துரைத்தல் சேயிழையாளுடன்
வழிவிளையாடல் வழியெதிர்வருவோ
ரெழினகராணிமை யிதுவெனவுரைத்த
ணகர்காட்டல்லொடு நகரிடைப்புக்குப்
பதிபரிசுரைத்தல் பாங்கியைக்கிட்டி
மதிநுதலாளை வளர்த்தவள்கேட்ட
லறத்தொடுநிற்ற லதுகேட்டழுங்க
திறப்பாடுன்னிச் செவிலிகவன்றுரைத்த
லடிநினைந்திரங்க லதுதாய்க்குரைத்தன்
மடவரல்போக வாடியுரைத்தல்
கிளிமொழிக்கிரங்கல் கிளர்சுடர்ப்பராய்த
லளிபெறுபருவத்திற் கவள்கவன்றுரைத்த
னுடத்துணித னற்றுய்நயந்தவர்
கூடக்கரையெனக் கொடிக்குறிபார்த்தல்
சோதிடங்கேட்டல் சுவடுகண்டறித
லேதமுற்றவைகண் டிரங்கியுரைத்தல்
வேட்டமாதரைக் கண்டுவினவல்
புறவொடுபுலத்தல் குரவொடுவருந்த
திறலருந்தவத்தொடு செல்லாநின்ற

மாவிரதியரை வழியிடைவினவல்
வேதியர்தம்மை விரும்பிவினவல்
புணர்ந்துடன்வருவோரைப் பொருந்திவினவன்
மணந்தருகுழலாண் மன்னியநிலையொடு
வேங்கைபட்டது கண்டுவியத்த
லாங்கவரியைபணி யவட்கெடுத்துரைத்தன்
மீளவுரைத்தன் மீளாதவளுக்
கூழ்முறையிதுவென வுலகியல்புரைத்த
லழுங்குதாய்க்குரைத்த லைம்பதோடாறு
முழுங்கொலைவேலோ னுடன்போக்காகும்.

பருவங்கூறல்.

க. பே. அருள்சிவம்பெறும்பத மிதுவெனவுரைத்தது.

க. சி. உருவது கண்டவ
ளருமை யுரைத்தது.

ஓராகமிரண்டெழிலாயொளிர்வோன்றில்லையொண்ணுதலங்
கராகம்பயின்றமிழ்தம்பொதிந்தீர்ஞ்சுணங்காடகத்தின்
பராகஞ்சிதர்ந்தபயோதரமிப்பரிசேபணைத்த
விராகங்கண்டால்வள்ளலேயில்லையேயெமரெண்ணுவதே. (கசுச)

மகட்பேச்சுரைத்தல்.

உ. பே. விரைவிலின்பம் பெறுவாயென்றது.

உ. சி. படைத்துமொழிகிளவியிற் பணிமொழிப்பாங்கி
யடற்கதிர்வேலோற் கறியவுரைத்தது.

மணியக்கணியுமரனஞ்சமஞ்சிமறுகிவிண்ணோர்
பணியக்கருணைதரும்பரன்றில்லையன்னுடிறத்துத்
துணியக்கருதுவதின்றேதுணிதுறைவாநிறைபொன்
னணியக்கருதுகின்றூர்பலர்மேன்மேலயலவரே. (கசுரு)

## பொன்னணிவுரைத்தல்.

ங. பே. அன்புடையோர்க்கே யின்பாமென்றது.

ங. சி. பலபரிசினலு மலர்நெடுங்கண்ணியை
நன்னுதற்பாங்கி பொன்னணிவரென்றது.

பாப்பணியோன் றில்லைப்பல்பூமருவுசில்லோதியைநற்
காப்பணிந்தார்பொன்னணிவாரினிக்கமழ்பூந்துறைவ
கோப்பணிவான்றோய்கொடிமுன்றினின்றிவையோர்குழுமி
மாப்பணிலங்கண்முழங்கத்தழங்குமணமுரசே. (கககூ)

## அருவிலையுரைத்தல்.

ச. பே. இன்பதனுக்கள வில்லையென்றது.

ச. சி. பேதையரறிவு பேதைமையுடைத்தென
வாதரத்தோழி யருவிலையுரைத்தது.

எலும்பாலணியிறையம்பலத்தோனெல்லைசெல்குறுவோர்
நலம்பாவியமுற்றுநல்கினுங்கல்வரைநாடரம்ம
சிலம்பாவடிக்கண்ணிசிற்றிடைக்கேவிலைசெப்பலொட்டார்
கலம்பாவியமுலையின்விலையென்னீகருதுவதே. (ககஎ)

## அருமைகேட்டழிதல்.

ரு. பே. உயிரின்பெமக் குறுமோவென்றது.

ரு. சி. பெருமை நாட்டத்தவ
ளருமைகேட் டழிந்தது.

விசும்புற்றதிங்கட்கழுமழப்போன்றினிவிம்மிவிம்மி
யசும்புற்றகண்ணோடலமுய்கிடந்தரன்றில்லையன்னாள்
குயம்புற்றரவிடைகூரெயிற்றூறல்குழன்மொழியி
னயம்பற்றிநின்றுநடுங்கித்தளர்கின்றநன்னெஞ்சமே. (ககஅ)

## தளர்வறிந்துரைத்தல்.

சூ. பே. உன்னுடன்சிவமுறு மெனவருளுரைத்தது.

சூ. சி. தண்டுறைவன் றளர்வறிந்து
கொண்டுநீங்கெனக் குறித்துரைத்தது.

மைதயங்குந்திரைவாரியைநோக்கிமடலவிழ்பூங்
கைதையங்கானலைநோக்கிக்கண்ணீர்கொண்டெங்கண்டர்தில்லைப்
பொய்தயங்குந்நுண்மருங்குனல்லாரையெல்லாம்புல்லினுள்
பைதயங்கும்மரவம்புரையும்மல்குற்பைந்தொடியே. (கசூசூ)

## குறிப்புரைத்தல்.

எ. பே. கண்டகுறியாற் கலவேமென்றது.

எ. சி. நறைக் குழலி
குறிப்பு ரைத்தது.

மாவைவந்தாண்டமென்னேக்கிதன்பங்கர்வண்டில்லைமல்லற்
கோவைவந்தாண்டசெவ்வாய்க்கருங்கண்ணிகுறிப்பறியேன்
பூவைதந்தாள்பொன்னம்பந்துதந்தாளென்னைப்புல்லிக்கொண்டு
பாவைதந்தாள்பைங்கிளியளித்தாளின்றென்பைந்தொடியே. (உ00)

## அருமையுரைத்தல்.

அ. பே: சிவன்றன்பெருமை யுயிரருட்குரைத்தது.

அ. சி. கானின்கடுமையு மானின்மென்மையும்
பதியின்சேட்சியு மிதுவெனவுரைத்தது.

மெல்லியல்கொங்கைபெரியமின்னேரிடைமெல்லடிபூக்
கல்லியல்வெம்மைக்கடங்கடுந்தீக்கற்றுவானமெல்லாஞ்
சொல்லியசீர்ச்சுடர்த்திங்களங்கண்ணித்தொல்லோன்புலியூ
ரல்லியங்கோதைநல்லாயெல்லைசேய்த்தெம்மகனகரே. (உ0க)

## ஆதரங்கூறல்.

கூ. பே. அன்புக்கிரங்கு மின்பெனவுரைத்தது.

கூ. சி. அழற்றடம்புரையு மருஞ்சுரமதுவு
நிழற்றடமவட்கு நின்னொடேகினென்றது.

பிணையுங்கலையும்வன்பேய்த்தேரினைப்பெருநீர்நசையா
லணையுமுரம்புநிரம்பியவத்தமுமையமெய்யே
யிணையுமளவுமில்லாவிறையோனுறைதில்லைத்தண்பூம்
பணையுந்தடமுமன்றேநின்னொடேகினெம்பைந்தொடிக்கே. (உ0உ)

## இறந்துபாடுரைத்தல்.

க0. பே. இன்புக்குயிரே யிடமென்றுரைத்தது.

க0. சி. கார்த்தடமுங் கயலும்போன்றீர்
வார்த்தடமுலையு மன்னனுமென்றது.

இங்கயலென்னீபணிக்கின்றதேர்தலிணைப்பதில்லாக்
கங்கையஞ்செஞ்சடைக்கண்ணுதலண்ணல்கடிகொடில்லைப்
பங்கயப்பாசடைப்பாய்தடநீயப்படர்தடத்துச்
செங்கயலன்றேகருங்கயற்கண்ணித்திருநுதலே. (உ0ங)

## கற்புநலனுரைத்தல்.

கக. பே. அருள்சிவத்திடைச்சென் றாதரங்கூறியது.

கக. சி பொய்யொத்தவிடை போக்குத்துணிய
வையத்திடை வழக்குரைத்தது.

தாயிற்சிறந்தன் றுநாண்டையலாருக்கந்நாண்டகைசால்
வேயிற்சிறந்தமென்றோளிதிண்கற்பின்விழுமிதன்றீங்
கோயிற்சிறந்துசிற்றம்பல்த்தாடுமெங்கூத்தப்பிரான்
வாயிற்சிறந்தமதியிற்சிறந்தமதிநுதலே. (உ0ச)

துணிந்தமைகூறல்.

கஉ. பே. சிவத்துக்கருளுயிர்ச் செய்கையுரைத்தது.

கஉ. சி. பொருவேலண்ணல் போக்குத்துணிந்தமை
செருவேற்கண்ணிக்குச் சென்றுசெப்பியது.

குறப்பாவைநின்குழல்வேங்கையம்போதொடுகோங்கம்விராய்
நறப்பாடலம்புனைவார்நினைவார்தம்பிரான்புலியூர்
மறப்பானடுப்பதொர்தீவினைவந்திடிற்சென்றுசென்று
பிறப்பானடுப்பினும்பின்னுந்துன்னத்தகும்பெற்றியரே. (உ0ரு)

துணிவொடுவினவல்.

கங. பே. உயிர்வழிவருங்கா ரணமேதென்றது.

கங. சி. சிலம்பன்றுணிவொடு செல்சுரநினைந்து
கலம்புனைகொம்பர் கலக்கமுற்றது.

நிழற்றலைதீநெறிநீரில்லைகானகமோரிகத்து
மழற்றலைவெம்பரற்றென்பரென்னேதில்லையம்பலத்தான்
கழற்றலைவைத்துக்கைப்போதுகள்கூப்பக்கல்லாதவர்போற்
குழற்றலைச்சொல்லிசெல்லக்குறிப்பாகுநங்கொற்றவர்க்கே. (உ0சு)

போக்கறிவித்தல்.

கச. பே. உயிருடன்படலரற் கருளேயுரைத்தது.

கச. சி. பொருசுடர்வேலவன் போக்குத்துணிந்தமை
யரிவைக்கவ ளறியவுரைத்தது.

காயமுமாவியுநீங்கள்சிற்றம்பலவன்கயிலைச்
சீயமுமாவும்வெரீஇவரலென்பல்செறிதிரைநீர்த்
தேயமும்யாவும்பெறினுங்கொடார்நமரின்னசெப்பிற்
றேயமுநாடுமில்லாச்சுரம்போக்குத்துணிவித்தவே. (உ0எ)

## நாணிழந்துவருந்தல்.

கரு. பே. இன்பமேயுயிருக் கேகாந்தமுன்னியது.

கரு. சி. கற்புநாணினு முற்சிறந்தமையிற்
சேணெறிசெல்ல வாணுதறுணிந்தது.

மற்பாய்விடையோன்மகிழ்புலியூரென்னொடும்வளர்ந்த
பொற்பார்திருநாண்பொருப்பர்விருப்புப்புகுந்துநுந்தக்
கற்பார்கடுங்கால்கலக்கிப்பறித்தெறியக்கழிக
விற்பாற்பிறவற்கவேழையர்வாழியெழுமையுமே. (உ0அ)

## துணிவெடுத்துரைத்தல்.

கசு. பே. இன்பத்துணிவுயிர்க் கருளியம்பியது.

கசு. சி. செல்வமாதர் செல்லத்துணிந்தமை
தொல்வரைநாடற்குத் தோழிசொல்லியது.

கம்பஞ்சிவந்தசலந்தரனுகங்கறுத்ததில்லை
நம்பன்சிவநகர்நற்றளிர்கற்சுரமாகுநம்பா
வம்பஞ்சியாவம்புகமிகநீண்டரிசிந்துகண்ணாள்
செம்பஞ்சியின்மிதிக்கிற்பதைக்கும்மலர்ச்சீறடிக்கே. (உ0கூ)

## குறியிடங்கூறல்.

கஎ. பே. யான்கொடுவரும்வழி நீவருகென்றது.

கஎ. சி. மன்னியவிருளிற் றுன்னியகுறியிற்
கோங்கிவர்கொங்கையை நீங்குகொண்டென்றது.

முன்னோன்மணிகண்டமொத்தவனம்பலந்தம்முடிதாழ்த்
துன்னாதவர்வினைபோற்பரந்தோங்குமெனதுயிரே
யன்னாளரும்பெறலாவியன்னயருளாசையினாற்
பொன்னார்மணிமகிழ்ப்பூவிழயாம்விழைபொங்கிருளே. (உக0)

## அடியொடுவழிநினைந்தவனுளம்வாடல்.

கஅ. பே. இன்பத்துக்கென்வழி வருந்துமேயென்றது.

கஅ. சி. நெறியுறுகுழலியொடு நீங்கத்துணிந்த
உறுசுடர்வேலோ னுள்ளம்வாடியது.

பனிச்சந்திரனொடுபாய்புனல்சூடும்பரன்புலியூ
ரனிச்சந்திகழுமஞ்சீறடியாவவழல்பழுத்த
கனிச்செந்திரளன்னகற்கடம்போந்துகடக்குமென்ரு
லினிச்சந்தமேகலையாட்கென்கொலாம்புகுந்தெய்துவதே. (உகக)

## கொண்டுசென்றுய்த்தல்.

கசு. பே. அருளேசிவங்கொண் டுயிர்க்கறிவித்தது.

கசு. சி. வண்டமர் குழலியைக்
கண்டுகொள் கென்றது.

வைவந்தவேலவர்சூழ்வரத்தேர்வரும்வள்ளலுள்ளந்
தெய்வந்தருமிருடேங்குமுழுதுஞ்செழுமிடற்றின்
மைவந்தகோன்றில்லைவாழ்த்தார்மனத்தின்வழுத்துநர்போன்
மொய்வந்தவாவிதெளியுந்துயிலுமிம்மூதெயிலே. (உகஉ)

## ஓம்படுத்துரைத்தல்.

உ0. பே. சிவத்திடைநெஞ்சந் திறம்பாயென்றது.

உ0. சி. தேம்படு கோதையை
ஓம்ப டுத்தது.

பறந்திருந்தும்பர்பதைப்பப்படரும்புரங்கரப்பச்
சிறந்தெரியாடிதென்றில்லையன்னுடிறத்துச்சிலம்பா
வறந்திருந்துன்னருளும்பிறிதாயினருமறையின்
றிறந்திரிந்தார்கலியும்முற்றும்வற்றுமிச்சேணிலத்தே. (உகங)

## வழிப்படுத்துரைத்தல்.

உக. பே. இன்பம்விடாதினி தேகென்றியம்பியது.
உக. சி. மதிநுதலியை வழிப்படுத்துப்
பதிவயிற்பெயரும் பாங்கிபகர்ந்தது.

ஈண்டொல்லையாயமுமௌவையுநீங்கவிவ்வூர்க்கவ்வைதீர்த்
தாண்டொல்லைகண்டிடக்கூடுகநும்மையெம்மைப்பிடித்தின்
றூண்டெல்லைதீரின்பந்தந்தவன்சிற்றம்பலநிலவு
சேண்டில்லைமாநகர்வாய்ச்சென்றுசேர்கதிருத்தகவே. (உகச)

## மெல்லக்கொண்டேகல்.

உஉ. பே. இன்பைப்பிரிவின்றி யினிதியம்பியது.
உஉ. சி. பஞ்சின்மெல்லடிப் பணைத்தோளியை
வெஞ்சுரத்திடை மெலிவகற்றியது.

பேணத்திருத்தியசீறடிமெல்லச்செல்பேரரவம்
பூணத்திருத்தியபொங்கொளியோன்புலியூர்புரையு
மாணத்திருத்தியவான்பதிசேருமிருமருங்குங்
காணத்திருத்தியபோலுமுன்னுமன்னுகானங்களே. (உகரு)

## அடலெடுத்துரைத்தல்.

உங. பே. இன்பைப்பார்த்ததன்வலி யுயிரெடுத்தியம்பியது.
உங. சி. வரிசிலையவர் வருகுவரெனப்
புரிதருகுழலிக் கருளவனுரைத்தது.

கொடித்தேர்மறவர்குழாம்வெங்கரிநிரைகூடினென்கை
வடித்தேரிலங்கெஃகின்வாய்க்குதவாமன்னுமம்பலத்தோ
னடித்தேரலனென்னவஞ்சுவனின்னையரென்னின்மன்னுங்
கடித்தேர்குழன்மங்கைகண்டிடிவ்விண்டோய்கனவரையே. (உகசு)

## அயர்வகற்றல்.

உச. பே. இன்பேயிடர்க்குத் துணையென்றியம்பியது.

உச. சி. இன்னல்வெங்கடத் தெறிவேலவ
னன்னமன்னவ ளயர்வகற்றியது.

முன்னோனருண்முன்னுமுன்னாவினையின்முனகர்துன்னு
மின்னுக்கடறிதிப்போழ்தேகடந்தின்றுகாண்டுஞ்சென்று
பொன்னாரணிமணிமாளிகைத்தென்புலியூர்புகழ்வார்
தென்னாவெனவுடையானடமாடுசிற்றம்பலமே. (உகஎ)

## நெறிவிலக்கிக்கூறல்.

உரு. பே. பெற்றோரின்பம் பற்றியுரைத்தது.

உரு. சி. சுரத்திடைக்கண்டவர் சுடர்க்குழைமாதொடு
சரத்தணிவில்லோய் தங்குகென்றது.

விடலையுற்றாரில்லைவெம்முனைவேடர்தமியைமென்பூ
மடலையுற்றார்குழல்வாடினண்மன்னுசிற்றம்பலவற்
கடலையுற்றாரினெறிப்பொழிந்தாங்கருக்கன்சுருக்கிக்
கடலையுற்றான்கடப்பாரில்லையின்றிக்கடுஞ்சுரமே. (உகஅ)

## கண்டவர்மகிழ்தல்.

உசூ. பே. உயிர்சிவங்கலந்த வுண்மைக்குமகிழ்தல்.

உசூ. சி. மண்டழற் கடத்துக்
கண்டவ ருரைத்தது.

அன்பணைத்தஞ்சொல்லிபின்செல்லுமாடவனீடவன்றன்
பின்பணைத்தோளிவருமிப்பெருஞ்சுரஞ்செல்வதன்று
பொன்பணைத்தன்னவிறையுறைதில்லைப்பொலிமலர்மே
னன்பணைத்தண்ணறவுண்ணளிபோன்றெளிர்நாடகமே. (உகசு)

## வழிவிளையாடல்.

உஎ. பே. இன்பிற்கலந்துயி ரன்புசெய்தது.

உஎ. சி. வன்றழற்கடத்து வடிவேலண்ணன்
மின்றங்கிடையொடு விளையாடியது.

கண்கடம்மாற்பயன்கொண்டனங்கண்டினிக்காரிகைநின்
பண்கடமென்மொழியாரப்பருகவருகவின்னே
விண்கடநாயகன்றில்லையின்மெல்லியல்பங்கனெங்கோன்
றண்கடம்பைத்தடம்போற்கடுங்கானகந்தண்ணெனவே. (உஉ0)

## நகரணிமைகூறல்.

உஅ. பே. சிவந்தங்கிடமிது வென்றுதேர்ந்தது.

உஅ. சி. வண்டமர் குழலியொடு
கண்டவ ருரைத்தது.

மின்றங்கிடையொடுநீவியன்றில்லைச்சிற்றம்பலவர்
குன்றங்கடந்துசென்றுனின்றுதோன்றுங்குரூஉக்கமலந்
துன்றங்கிடங்குந்துறைதுறைவள்ளைவெள்ளைநகையார்
சென்றங்கடைதடமும்புடைசூழ்தருசேணகரே. (உஉக)

## நகர்காட்டல்.

உகூ. பே. அன்பாலடுத்த தென்றியம்பியது.

உகூ. சி. கொடுங்கடங்கடந்த குழைமுகமாதர்க்குத்
தடங்கிடங்குசூழ் தன்னகர்காட்டியது.

மின்போல்கொடிநெடுவானக்கடலுட்டிரைவிரிப்பப்
பொன்போல்புரிசைவடவரைகாட்டப்பொலிபுலியூர்
மன்போற்பிறையணிமாளிகைசூலத்தவாய்மடவாய்
நின்போனடையன்னந்துன்னிமுன்றோன்றுநன்னீணகரே. (உஉஉ)

## பதிபரிசுரைத்தல்.

௩0. பே, இன்பமாமிடமிவை யென்றியம்பியது.

௩0. சி. கண்ணிவர்வளநகர் கண்டுசென்றடைந்து
பண்ணிவர்மொழிக்குப் பதிபரிசுரைத்தது.

செய்குன்றுவையிவைசீர்மலர்வாவிவிசும்பியங்கி
நைகின்றதிங்களெய்ப்பாறும்பொழிலவைஞாங்கரெங்கும்
பொய்குன்றவேதியரோதிடமுந்திடமிந்திடமு
மெய்குன்றவார்சிலையம்பலவற்கிடமேந்திழையே. (உஉ௩)

## செவிலிதேடல்.

௩க. பே. திரோதையைக்கடந்த செய்கையுரைத்தது.

௩க. சி. கவலையுற்ற காதற்றோழியைச்
செவிலியுற்றுத் தெரிந்துவினயது.

மயிலெனப்பேர்ந்திளவல்லியினொல்கிமென்மான்விழித்துக்
குயிலெனப்பேசுமெங்குட்டனெங்குற்றதென்னெஞ்சகத்தே
பயிலெனப்பேர்ந்தறியாதவன்றில்லைப்பல்பூங்குழலா
யயிலெனப்பேருங்கண்ணுயென்கொலாமின்றயர்கின்றதே. (உஉச)

## அறத்தொடுநிற்றல்.

௩உ. பே. அருளேதிரோதை யாந்திறமுரைத்தது.

௩உ. சி. சுடர்க்குழைப்பாங்கி படைத்துமொழிகிளவியிற்
சிறப்புடைச்செவிலிக் கறத்தொடுநின்றது.

ஆளரிக்கும்மரிதாய்த்தில்லையாவருக்கும்மெளிதாந்
தாளரிக்குன்றிற்றன்பாவைக்குமேவித்தழறிகழ்வேற்
கோளரிக்குந்நிகரன்னுரொருவர்குரூஉமலர்த்தார்
வாளரிக்கண்ணிகொண்டாள்வண்டாலயத்தெம்வாணுதலே. (உஉரு)

கற்புநிலைக்கிரங்கல்.

௩௩. பே. திரோதையுமிரங்கித் திரும்பியுரைத்தது.

௩௩. சி. விற்புரைநுதலி கற்புநிலைகேட்டுக்
கோடாயுள்ள நீடாயழுங்கியது.

வடுத்தான்வகிர்மலர்கண்ணிக்குத்தக்கின்றுதக்கன்முத்தீக்
கெடுத்தான்கெடலிறெல்லோன்றில்லைப்பன்மலர்கேழ்கிளர
மடுத்தான்குடைந்தன்றழுங்கவழுங்கித்தழீஇமகிழ்வுற்
றெடுத்தாற்கினியனவேயினியாவனவெம்மனைக்கே. (உஉசு)

கவன்றுரைத்தல்.

௩௪. பே. இன்பச்சின்னங் கண்டேனென்றது.

௩௪. சி. அவணிலை நினைந்து
செவிலி கவன்றது.

முறுவலக்காறந்துவந்தென்முலைமுழுவித்தழுவிச்
சிறுவலக்காரங்கள்செய்தவெல்லாமுழுதுஞ்சிதையத்
தெறுவலக்காலனைச்செற்றவன்சிற்றம்பலஞ்சிந்தியா
ருறுவலக்கானகந்தான்படர்வானுமொளியிழையே. (உஉஎ)

அடிநினைந்திரங்கல்.

௩௫. பே. சிவனதுகருணையைத் திரோதைவியந்தது.

௩௫. சி. வெஞ்சுரமும்மவள் பஞ்சிமெல்லடியுஞ்
செவிலிநினைந்து கவலையுற்றது.

தாமேதமக்கொப்புமற்றில்லவர்தில்லைத்தண்ணணிச்சப்
பூமேன்மிதிக்கிற்பதைத்தடிபொங்குநங்காயெரியுந்
தீமேலயில்போற்செறிபரற்கானிற்சிலம்படிபா
யாமேநடக்கவருவினையேன்பெற்றவம்மனைக்கே. (உஉஅ)

## நற்றாய்க்குரைத்தல்.

௩௬. பே. திரோதைபரைக்குயிர்ச் செய்கையுரைத்தது.
௩௬. சி. முகிழ்முலைமடந்தைக்கு முன்னியதறியத்
திகழ்மனைக்கிழத்திக்குச் செவிலிசெப்பியது.

தழுவினகையிறைசோரிற்றமியமென்றேதளர்வுற்
றழுவினைசெய்யுநையாவஞ்சொற்பேதையறிவிண்ணோர்
குழுவினையுய்யநஞ்சுண்டம்பலத்துக்குனிக்கும்பிரான்
செழுவினதாள்பணியார்பிணியாலுற்றுத்தேய்வித்ததே. (உஉகூ)

## நற்றாய்வருந்தல்.

௩௭. பே. திரோதையுரைக்கப் பரைபிரிந்திரங்கல்.
௩௭. சி. கோடாய் கூற
நீடாய் வாடியது.

யாழியன்மென்மொழிவன்மனப்பேதையொரேதிலன்பின்
றோழியைநீத்தென்னைமுன்னேதுறந்துதன்னார்கண்முன்னே
வாழியிம்மூதூர்மறுகச்சென்றாளன்றுமால்வணங்க
வாழிதந்தானம்பலம்பணியாரினருஞ்சுரமே. (உ௩0)

## கிளிமொழிக்கிரங்கல்.

௩அ. பே. பரையின்பத்தின் பண்புக்கிரங்கியது.
௩அ. சி. மெய்த்தகைமாது வெஞ்சுரஞ்செல்லத்
தத்தையைநோக்கித் தாய்புலம்பியது.

கொன்னுனைவேலம்பலவற்றொழாரிற்குன்றங்கொடியோ
ளென்னணஞ்சென்றனளென்னணஞ்சேருமெனவயரா
வென்னனைபோயினள்யாண்டையளென்னைப்பருந்தடுமென்
றென்னனைபோக்கன்றிக்கிள்ளையென்னுள்ளத்தையீர்கின்றதே. உ௩க

சுடரேர் டிரத்தல்.

௩௯. பே. பரைதிருமேனிப் பண்புக்கிரங்கியது.

௩௯. சி. வெஞ்சுரந்தணிக்கெனச் செஞ்சுடரவற்கு
வேயமர்தோளி தாயர்பராயது.

பெற்றேனெடுங்கிள்ளைவாடமுதுக்குறைபெற்றிமிக்கு
நற்றேன்மொழியழற்கானடந்தாண்முகநாணனுகப்
பெற்றேன்பிறவிபெருமற்செய்தோன்றில்லைத்தேன்பிறங்கு
மற்றேன்மலரின்மலர்த்திரந்தேன்சுடர்வானவனே. (உ௩உ)

பருவரினைந்துகவறல்.

௪0. பே. இன்பமுயிரன் பென்கொளவென்றது.

௪0. சி. முற்று முலைக்கு
நற்றாய் கவன்றது.

வைம்மலர்வாட்புடையூரற்குச்செய்யுங்குற்றேவன்மற்றென்
மைம்மலர்வாட்கண்ணிவல்லள்கொல்லாந்தில்லையான்மலைவாய் [துக்
மொய்ம்மலர்க்காந்தளைப்பாந்தளென்றெண்ணித் துண்ணென்றொளித்
கைம்மலராற்கண்புதைத்துப்பதைக்குமெங்கார்மயிலே. (உ௩௩)

நாடத்துணிதல்.

௪௧. பே. திரோதையின்பின்யானே தேடுவனென்றது.

௪௧. சி. கோடாய் மடந்தைய்ய
நாடத் துணிந்தது.

வேயினதோளிமெலியல்விண்ணோர்தக்கன்வேள்வியின்வாய்ப்
பாயினசீர்த்தியனம்பலத்தானைப்பழித்துமும்மைத்
தீயினதாற்றல்சிரங்கண்ணிழந்துதிசைதிசைதாம்
போயினவெல்லையெல்லாம்புக்குநாடுவன்பொன்னினையே. (உ௩௪)

எ

## கொடிக்குறிப்பார்த்தல்.

சஉ. பே. பரையேசிவத்தின் குறிப்பண்புபார்த்தது.

சஉ. சி. நற்றாய் நயந்து
சொற்புட் பராயது.

பணங்களஞ்சாலும்பருவரவார்த்தவன்றில்லையன்ன
மணங்கொளஞ்சாயலுமன்னனுமின்னேவரக்கரைந்தா
லுணங்கலஞ்சாதுண்ணலாமொண்ணிணப்பலியொக்குவன்மாக்
குணங்களஞ்சாற்பொலியுங்நல்சேட்டைக்குலக்கொடியே. (உஙரு)

## சோதிடங்கேட்டல்.

சங. பே. திரோதையுயிர்ப்பண்பு தீருமோவென்றது.

சங. சி. சித்தந்தளர்ந்து தேடுங்கோடாய்
உய்த்துணர்வோரை யுரைமினென்றது.

முன்னுங்கடுவிடமுண்டதென்றில்லைமுன்னோனருளா
லின்னுங்கடியிக்கடிமனைக்கேமற்றியாமயர
மன்னுங்கடிமலர்க்கூந்தலைத்தான்பெறுமாறுமுண்டே
லுன்னுங்கடிதின்றியோதுங்களுன்மறையுத்தமரே. (உஙசு)

## சுவடுகண்டறிதல்.

சச. பே. திரோதைசிவம்பெறுஞ் சின்னங்கண்டது.

சச. சி. சுவடுபடு கடத்துச்
செவிலிகண் டறிந்தது.

தெள்வன்புனற்சென்னியோனம்பலஞ்சிந்தியாரினஞ்சேர்
முள்வன்பரன்முரம்பத்தின்முன்செய்வினையேனெடுத்த
வொள்வன்படைக்கண்ணிசீறடியிங்கிவையுங்குவையக்
கள்வன்பகட்டுரவோனடியென்றுகருதுவனே. (உஙஎ)

## சுவடுகண்டிரங்கல்.

சரு. பே. திரோதைசிவத்தின் சின்னத்திற்கிரங்கியது.

சரு. சி. கடத்திடைக்காரிகை யடித்தலங்கண்டு
மன்னருட்கோடா யின்னலெய்தியது.

பாலொத்தநீற்றம்பலவன்கழல்பணியார்பிணிவாய்க்
கோலத்தவிசின்மிதிக்கிற்பதைத்தடிகொப்புள்கொள்ளும்
வேலொத்தவெம்பரற்கானத்தினின்றேர்விடலைபின்போங்
காலொத்தனவினையேன்பெற்றமாணிழைகான்மலரே. (உ௩அ)

## வேட்டமாதரைக்கேட்டல்.

ச௬. பே. திரோதையேபெற்றவர் தேறவுரைத்தது.

ச௬. சி. மென்மலர்கொய்யும் வேட்டமாதரைப்
பின்வருசெவிலி பெற்றிவினையது.

பேதைப்பருவம்பின்சென்றதுமுன்றிலெனைப்பிரிந்தா
ளூதைக்கலமரும்வல்லியொப்பாண்முத்தன்றில்லையன்னா
ளேதிற்சுரத்தயலானொடின்றேகினள்கண்டனையே
போதிற்பொலியுந்தொழிற்புலிப்பற்குரற்பொற்றொடியே. (உ௩௯)

## புறவொடுபுலத்தல்.

சஎ. பே. திரோதைசிவத்தின் செய்கையுரைத்தது.

சஎ. சி. காட்டுப் புறவொடு
வாட்ட முரைத்தது.

புயலன்றலர்சடையேற்றவன்றில்லைப்பொருப்பரசி
பயலன்றனைப்பணியாதவர்போன்மிகுபாவஞ்செய்தேற்
கயலன்றமியனஞ்சொற்றுணைவெஞ்சுரமாதர்சென்று
வியலன்றெனக்கிற்றிலைமற்றுவாழியெழிற்புறவே. (உ௪௦)

குரவொடுவருந்தல்.

சஅ. பே. திரோதையெங்குஞ் சிவமேவினுயது.

சஅ. சி. தேடிச்சென்ற செவிலித்தாயர்
ஆடற்குரவொடு வாடியுரைத்தது.

பாயும்விடையோன்புலியூரனையவென்பாவைமுன்னே
காயுங்கடத்திடையாடிக்கட்ப்பவுங்கண்டுநின்று
வாயுந்திறவாய்குழையெழில்வீசவண்டோலுறுத்த
நீயுநின்பாவையுநின்றுநிலாவிடுநீள்குரவே. (உசக)

விரதியரைவினுவல்.

சகூ. பே. திரோதைதவத்தர் திறத்தில்வினுயது.

சகூ. சி. வழிவருகின்ற மாவிரதியரை
மொழிமின்களென்று முன்னிமொழிந்தது.

சுத்தியபொக்கணத்தென்பணிகட்டங்கஞ்சூழ்சடைவெண்
பொத்தியகோலத்தினீர்புலியூரம்பலவர்க்குற்ற
பத்தியர்போலப்பணைத்திறுமாந்தபயோதரத்தோர்
பித்திதற்பின்வரமுன்வருமோவொர்பெருந்தகையே. (உசஉ)

வேதியரைவினுவல்.

ருo. பே. திரோதைபெற்றேரைச் சென்றுவினுயது.

ருo. சி. மாதின்பின் வருஞ்செவிலி
வேதியரை விரும்பிவினுயது.

வெதிரேய்கரத்துமென்றேலேய்சுவல்வெள்ளைநூலிற்கொண்மூ
வதிரேய்மறையினிவ்வாறுசெல்வீர்தில்லையம்பலத்துக்
கதிரேய்சடையோன்கரமானெனவொருமான்மயில்போ
லெதிரேவருமேசுரமேவெறுப்பவொரேந்தலொடே. (உசங)

புணர்ந்துடன்வருவோரைப்பொருந்திவினவல்.

ருக. பே. திரோதைபெற்ற சிவத்தைக்காட்டியது.

ருக. சி. புணர்ந்துடன்வரும் புரவலனொருபால்
அணங்கமர்கோதையை யாராய்ந்தது.

மீண்டாரெனவுவந்தேன்கண்டுநும்மையிம்மேதகவே
பூண்டாரிருவர்முன்போயினரேபுலியூரெனைநின்
ருண்டானருவரையாளியன்னானைக்கண்டேனயலே
தூண்டாவிளக்கனையாயென்னையோவன்னைசொல்லியதே. (உசச)

வியந்துரைத்தல்.

ருஉ. பே. திரோதையின்புயிர்க்குச் செய்திறங்கண்டது.

ருஉ. சி. வேங்கைபட்டதும் பூங்கொடிநிலையும்
நாடாவருங் கோடாய்கூறியது.

பூங்கயிலாயப்பொருப்பன்றிருப்புலியூரதென்னத்
தீங்கயிலாயச்சிறியாணின்றதிவ்விடஞ்சென்றெதிர்ந்த
வேங்கையின்வாயின்வியன்கைமடுத்துக்கிடந்தலற
வாங்கயிலாற்பணிகொண்டது திண்டிறலாண்டகையே. (உசரு)

இயைபெடுத்துரைத்தல்.

ருங. பே. திரோதையின்புருவைச் சிவமாக்கண்டது.

ருங. சி. சேயிழையோடு செம்மல்போதர
ஆயிழைபங்கனென் றயிர்த்தேமென்றது.

மின்றொத்திடுகழனூபுரம்வெள்ளைசெம்பட்டுமின்ன
வொன்றொத்திடவுடையாளொடொன்றும்புலியூரனென்றே
நன்றொத்தெழிலைத்தொழவுற்றனமென்னதோர்நன்மைதான்
குன்றத்திடைக்கண்டனமன்னைநீசொன்னகொள்கையரே. (உசசு)

### மீளவுரைத்தல்.

ருச. பே. அடியார்சிவத்தோ டாவாயென்றது.

ருச. சி. கடுங்கடங்கடந்தமை கைத்தாய்க்குரைத்து
நடுங்கன்மின்மீண்டு நடமினென்றது.

மீள்வதுசெல்வதன்றன்னையிவ்வெங்கடத்தக்கடமாக்
கீள்வதுசெய்தகிழவோனொடுங்கிளர்கெண்டையன்ன
நீள்வதுசெய்தகண்ணாளிங்கெடுஞ்சுரநீந்தியெம்மை
யாள்வதுசெய்தவன்றில்லையினெல்லையணுகுவரே. (௨சஎ)

### உலகியல்புரைத்தல்.

ருரு. பே. பெற்றவின்பம் பிறர்கொள்வரென்றது.

ருரு. சி. செவிலியது கவலைதீர
மன்னியவுலகியன் முன்னியுரைத்தது.

சுரும்பிவர்சந்துந்தொகேடன்முத்தும்வெண்சங்குமெங்கும்
விரும்பினர்பாற்சென்றுமெய்க்கணியாம்வியன்கங்கையென்னும்
பெரும்புனல்சூடும்பிரான்சிவன்சிற்றம்பலமனைய
கரும்பனமென்மொழியாருமங்நீர்மையர்காணுநர்க்கே. (௨சஅ)

### அழுங்குதாய்க்குரைத்தல்.

ருசு. பே. அடியார்திரோதை யருளேயென்றது.

ருசு. சி. செழும்பணை யணைந்தமை
அழுங்குதாய்க் குரைத்தது.

ஆண்டிலெடுத்தவராமிவர்தாமவரல்குவர்போய்த்
தீண்டிலெடுத்தவர்தீவினைதீர்ப்பவன்றில்லையின்வாய்த்
தூண்டிலெடுத்தவராறெங்கொடேற்றப்பழம்விழுந்து
பாண்டிலெடுத்தப்ஃறுமரைகீழும்பழனங்களே. (௨சகூ)

---

## கஎ. வரைவுமுடுக்கம்.

வரைவு முடுக்கமாவது சிவனதுகருணை தெரிய வுரைத்தவ் வின்பம் பெறவரு ளெடுத்தியம்பியது. இது பதினாறு துறையுடைத்து. அவை வருமாறு:—

வருத்தங்கூற லவன்மறுத்துரைத்த
லுள்ளதுகூற லேதங்கூறல்
பகல்வரலென்ற றெழுதிரந்துரைத்தல்
சிறைப்புறங்கூறன் மந்திமேல்வைத்தல்
கண்டுயிலாமை கண்டாருரைத்தல்
பகலுடம்பட்டாள்போன் றிரவரலென்ற
லிரவுடம்பட்டாள்போன்று பகல்வரலென்ற
லிரவும்பகலும் வரவொழிகென்றல்
காலங்கூறல் கூறுவிக்குற்றல்
செலவுகூறல் பொலிவழிவுரைத்தலென்
றீரெண்கிளவியு மியம்புங்காலை
வாரணிமுலையாய் வரைவுமுடுக்கம்.

வருத்தமிகுதிகூறிவரைவுகடாதல்.

க. பே. சிவனதுகருணை தெரியவுரைத்தவ்
வின்பம்பெற வகுத்துரைத்தது
க. சி. இரவுக்குறியிடத் தேந்திழைப்பாங்கி
வரைவுவேண்டுதல் வரவுரைத்தது.

எழுங்குலைவாழையினின்கனிதின்றிளமந்தியந்தண்
செழுங்குலைவாழைநிழலிற்றுயில்சிலம்பாமுனைமே
லுழுங்கொலைவேற்றிருச்சிற்றம்பலவரையுன்னலர்போ
லழுங்குலைவேலன்னகண்ணிக்கென்னோநின்னருள்வகையே. (உருO)

## பெரும்பான்மைகூறிமறுத்தல்.

உ. பே. உயிர்சிவப்பெருமை யெடுத்தருட்கியம்பியது.

உ. சி. குலம்புரி கொம்பர்க்குச்
சிலம்பன் செப்பியது.

பரம்பயன்றன்னடியேனுக்குப்பார்விசும்பூடுருவி
வரம்பயன்மாலறியாத்தில்லைவானவன்வானகஞ்சே
ரரம்பையர்தம்மிடமோவன்றிவேழத்தினென்புநட்ட
குரம்பையர்தம்மிடமோவிடந்தோன்றுமிக்குன்றிடத்தே. (உருக)

## உள்ளதுகூறிவரைவுகடாதல்.

ங. பே. இன்பத்துக்கிடமியல் பருளுயிர்க்கியம்பியது.

ங. சி. இன்மையுரைத்த மன்னனுக்கு
மாழைநோக்கி தோழியுரைத்தது.

சிறூர்கவண்வாய்த்தமணியிற்சிதைபெருந்தேனிழுமென்
றிருல்கழிவுற்றெஞ்சிறுகுடிலுந்துமிடமிதெந்தை
யுருவரையுற்றூர்குறவர்பெற்றாளுங்கொடிச்சியும்பர்
பெறுவருளம்பலவன்மலைக்காத்தும்பெரும்புனமே. (உருஉ)

## ஏதங்கூறியிரவரவுவிலக்கல்.

ச. பே. இன்புருக்காண்டற் கிரவிலையென்றது.

ச. சி. இரவருதுயர மேந்தலுக்கெண்ணிப்
பருவரலெய்திப் பாங்கிபகர்ந்தது.

கடந்தொறும்வாரணவல்சியினுடிப்பல்சீயங்கங்கு
லிடந்தொறும்பார்க்குமியவொருநீயெழில்வேலின்வந்தாற்
படந்தொறுந்தீயரவன்னம்பலம்பணியாரினெம்மைத்
தொடர்ந்தொறுந்துன்பென்பதேயன்பநின்னருடோன்றுவதே. ()

## பழிவரவுரைத்துப்பகல்வரவுவிலக்கல்.

ரு. பே. இன்புருக்கொளிவே றில்லையென்றது.

ரு. சி. ஆங்ஙனமொழுகு மடல்வேலண்ணலைப்
பாங்கியைய பகல்வரலென்றது.

களிறுற்றசெல்லல்களைவயிற்பெண்மரங்கைஞ்ஞெமிர்த்துப்
பிளிறுற்றவானப்பெருவரைநாடபெடைநடையோ
டொளிறுற்றமேனியன்சிற்றம்பலநெஞ்சுறாதவர்போல்
வெளிறுற்றவான்பழியாம்பகனீசெய்யுமெய்யருளே. (உருச)

## தொழுதிரந்துகூறல்.

சு. பே. இன்புக்கிருளிலை யேகாயென்றது.

சு. சி. இரவரவி னேதமஞ்சிச்
சுரிதருகுழற் றோழிசொல்லியது.

கழிகட்டலைமலைவோன்புலியூர்கருதாதவர்போற்
குழிகட்களிறுவெரீஇயரியாளிகுழீஇவழங்காக்
கழிகட்டிரவின்வரல்கழல்கைதொழுதேயிரந்தேன்
பொழிகட்புயலின்மயிலிற்றுவளுமிவள்பொருட்டே. (உருரு)

## தாயறிவுகூறல்.

எ. பே. திரோதையுந்திரும்ப லாமென்றுகூறியது.

எ. சி. சிறைப்புறத்துச் செம்மல்கேட்ப
வெறிக்குழற்பாங்கி மெல்லியற்குரைத்தது.

விண்ணுஞ்செலவறியாவெறியார்கழல்வீழ்சடைத்தீ
வண்ணன்சிவன்றில்லைமல்லெழிற்கானலரையிரவி
னண்ணன்மணிநெடுந்தேர்வந்ததுண்டாமெனச்சிறிது
கண்ணுஞ்சிவந்தன்னையென்னையுநோக்கினள்கார்மயிலே. (உருசு)

மந்திமேல்வைத்துவரைவுகடாதல்.

அ. பே. பெற்றோர்பேறெடுத்தருள்பெருங்கருணையுரைத்தது

அ. சி. வரிவளையை வரைவுகடாவி
யரிவைதோழி யுரைபகர்ந்தது.

வான்றோய்பொழிலெழின்மாங்கனிமந்தியின்வாய்க்கடுவன்
றேன்றோய்த்தருத்திமகிழ்வகண் டாடிருநீண்முடிமேன்
மீன்றோய்புனற்பெண்ணைவைத்துடையாளையுமேனிவைத்தான்
வான்றோய்மதிற்றில்லைமாநகர்போலும்வரிவளையே. (உருஎ)

காவன்மேல்வைத்துக்கண்டுயிலாமைகூறல்.

௯. பே. உயிர்க்கின்பிடையூ றுண்டென்றியம்பியது.

௯. சி. நகர் காவலின்
மிகுகழி காதல்.

நறைக்கண்மலிகொன்றையோனின் றுநாடகமாடுதில்லைச்
சிறைக்கண்மலிபுனற்சீர்நகர்காக்குஞ்செவ்வேலிளைஞர்
பறைக்கண்படும்படுந்தோறும்படாமுலைப்பைந்தொடியாள்
கறைக்கண்மலிகதிர்வேற்கண்படாதுகலங்கினவே. (உருஅ)

பகலுடம்பட்டாள்போன்றிரவரவுவிலக்கல்.

௧0. பே. சகலமுடன்பட்டுக் கேவலமொருவியது.

௧0. சி. விரைதரு தாரோ
யிரவர லென்றது.

கலராயினர்நினையாத்தில்லையம்பலத்தான்கழற்கன்
பிலராயினர்வினைபோலிருடூங்கிமுழங்கிமின்னிப்
புலராவிரவும்பொழியாமழையும்புண்ணின் னுழைவேன்
மலராவருமருந்தும்மில்லையோநும்வரையிடத்தே. (உருகூ)

இரவுடன்பட்டாள்போன்றுபகல்வரவுவிலக்கல்.

கக. பே. கேவலம்போற்சகல மென்றருளியம்பியது.

கக. சி. இகலடு வேலோய்
பகல்வர லென்றது.

இறவரையும்பர்க்கடவுட்பராய்நின்றெழிலியுன்னிக்
குறவரையார்க்குங்குளிர்வரைநாடகொழும்பவள
நிறவரைமேனியன்சிற்றம்பலநெஞ்சுறாதவர்போ
லுறவரைமேகலையாட்கலராம்பகலுன்னருளே. (உசுO)

இரவும்பகலும்வரவுவிலக்கல்.

கஉ. பே. கேவலசகலமு மேவிலையென்றது.

கஉ. சி. இரவும் பகலும்
வரவொழி கென்றது.

சுழியாவருபெருநீர்சென்னிவைத்தென்னைத்தன்றொழும்பிற்
கழியாவருள்வைத்தசிற்றம்பலவன்கரந்தருமான்
விழியாவரும்புரிமென்குழலாடிறத்தையமெய்யே
பழியாம்பகல்வரினீயிரவேதும்பயனில்லையே. (உசுக)

காலங்கூறிவரைவுகடாதல்.

கங. பே. பக்குவமீதெனப் பரிந்தருளியம்பியது.

கங. சி. முந்தியபொருளைச் சிந்தையில்வைத்து
வரைதருகிளவியிற் றெரியவுரைத்தது.

மையார்கதலிவனத்துவருக்கைப்பழம்விழுதே
னெய்யாதயின்றிளமந்திகள்சோருமிருஞ்சிலம்பா
மெய்யாவரியதெனம்பலத்தான்மதியூர்கொள்வெற்பின்
மொய்யார்வளரிளவேங்கைபொன்மாலையின்முன்னினவே. (உசுஉ)

கூறுவிக்குற்றல்.

கச. பே. சிவத்திலுயிரின்பார்வதன்றி யாகாதென்றேயருளிய

கச. சி. ஓத்ததொவ்வா துரைத்ததோழி [ம்பியது.
கொத்தவிழ்கோதையாற் கூறுவிக்குற்றது.

தேமாம்பொழிற்றில்லைச்சிற்றம்பலத்துவிண்ணோர்வணங்க
நாமாதரிக்கநடம்பயில்வோனைநண்ணுதவரின்
வாமாண்கலைசெல்லநின்றூர்கிடந்தநம்மல்லல்கண்டாற்
றுமாவறிகிலராயினென்னுஞ்சொல்லுந்தன்மைகளே. (உசுங)

செலவுநினைந்துரைத்தல்.

கரு. பே. அருளாற்சிவமுயிர்க் கன்பறிவித்தல்.

கரு. சி. பாங்கிநெருங்கப் பணிமொழிமொழிந்து
தேங்கமழ்சிலம்பற்குச் சிறைப்புறக்கிளவி.

வல்சியினெண்குவளர்புற்றகழமல்கும்மிருள்வாய்ச்
செல்வரிதன்றுமன்சிற்றம்பலவரைச்சேரலர்போற்
கொல்கரிசீயங்குறுகாவகைபிடிதானிடைச்செல்
கல்லதரென்வந்தவாறென்பவர்ப்பெறிற்கார்மயிலே. (உசுச)

பொலிவழிவுரைத்துவரைவுகடாதல்.

கசு. பே. இன்னுங்கருணைகண் டிலையோவென்றது.

கசு. சி. வரைவுவிரும்பு மன்னுயிர்ப்பாங்கி
விரைதருகுழலி மெலிவுரைத்தது.

வாரிக்களிற்றின்மருப்புகுமுத்தம்வரைமகளிர்
வேரிக்களிக்கும்விழுமலைநாடவிரிதிரையி
னரிக்களிக்கமர்கன்மாச்சடைமுடிநம்பர்தில்லை
யேரிக்களிக்கருமஞ்ஞையிந்நீர்மையென்னெய்துவதே. (உசுரு)

## கஅ. வரைபொருட்பிரிதல்.

வரைபொருட் பிரிதலாவது கருணை யருடிரோதைபரை யின் புணர்தல். இது முப்பத்து மூன்று துறையுடைத்து. அவை வருமாறு:—

முலைவிலைகூறல் வரைவுடம்படுத்தல்
வரைபொருட்கேகலை யுரையவட்கென்ற
னீகூறென்றல் சொல்லாதேகல்
பிரிந்தமைகூற னெஞ்சொடுகூற
னெஞ்சொடுவருந்தல் வருத்தங்கண்டுரைத்தல்
வற்புறுத்தல்லொடு வன்புறையழிதல்
வாய்மைகூறன் மன்னவன்மெய்யுரை
தேருறுதுபுலம்பல் காலமறைத்துரைத்த
றூதுவரவுரைத்த றூதுகண்டழுங்கன்
மெலிவுகண்டு செவிலியுரைத்தன்
மேவியசெவிலி கட்டுவைப்பித்தல்
கலக்குற்றுநிற்றல் கட்டுவித்திகூறல்
வேலனையழைத்த லின்னலெய்தல்
விலக்கநினைத்த னிலைமையுரைத்த
லறத்தொடுநிற்ற லையந்தீர்த்த
லவன்வெறிவிலக்கல் செவிலிக்குத்தோழி
யறத்தொடுநிற்ற னற்றுயக்குச்செவிலி
யறத்தொடுநிற்ற றேர்வரவுரைத்தன்
மணமுரசுகேட்டு மகிழ்ந்துரைத்த
லையுற்றுக்கலங்க ல்வனிதிகாட்ட
லாறைந்துடனே கூறியமூன்றும்
விரைமலர்க்குழலாய் வரைபொருட்பிரிதல்.

## முலைவிலைகூறல்.

க. பே. கைம்மாறின்பக் கனத்துக்கிலையென்றது.

க. சி. கொலைவேற் கண்ணிக்கு
விலையிலை யென்றது.

குறைவிற்குங்கல்விக்குஞ்செல்விற்குநின்குலத்திற்கும்வந்தோர்
நிறைவிற்குமேதகுநீதிக்குமேற்பினல்லாணிணையி
ணிறைவிற்குலாவரையேந்திவண்டில்லையனேழ்பொழிலு
முறைவிற்குலாநுதலாள்விலையோமெய்ம்மையோதுநர்க்கே. (உசுசு)

## வருமதுகூறிவரைவுடம்படுத்தல்.

உ. பே. அடியார்க்கலராகா தணையின்பென்றது.

உ. சி. தொடுத்தனவிடுத்துத் தோகைதோளெய்
திடுக்கண்பெரி திரவரினென்றது.

வடுத்தனநீள்வகிர்க்கண்ணிவெண்ணித்திலவாணகைக்குத்
தொடுத்தனநீவிடுத்தெய்தத்துணியென்னைத்தன்றொழும்பிற்
படுத்தநன்னீள்கழலீசர்சிற்றம்பலந்தாம்பணியார்க்
கடுத்தனதாம்வரிற்பொல்லாதிரவினின்றாருளே. (உசுஎ)

## வரைபொருட்பிரிவை யுரையெனக்கூறல்.

ங. பே. யானன்பாலின்ப மாவுரையென்றது.

ங. சி. ஆங்கவள்வயி னீங்கலுற்றவன்
இன்னுயிர்த்தோழிக்கு முன்னிமொழிந்தது.

குன்றங்கிடையுங்கடந்துமர்கூறுநிதிகொணர்ந்து
மின்றங்கிடைநும்மையும்வந்துமேவ்வனம்பலஞ்சேர்
மன்றங்கிடைமருதேகம்பம்வாஞ்சியமன்னபொன்னைச்
சென்றங்கிடைகொண்டுவாடாவகைசெப்புதேமொழியே. (உசுஅ)

நீயேகூறென்றல்.

ச. பே. அன்பாலின்புற லுனக்கெளிதென்றது.

ச. சி. காய்கதிர்வேலோய் கனங்குழையவட்கு
நீயேயுரை நின்செலவென்றது.

கேழேவரையுமில்லோன்புலியூர்ப்பயில்கிள்ளையன்ன
யாழேர்மொழியாளிரவரினும்பகற்சேறியென்று
வாழேனெனவிருக்கும்வரிக்கண்ணியைநீவருட்டித்
தாழேனெனவிடைக்கட்சொல்லியேகுதனிவள்ளலே. (உசுசு)

சொல்லாதேகல்.

ரு. பே. எக்காலும்பிரி வில்லையென்றது.

ரு. சி. நிரைவளை வாட
வுரையா தகன்றது.

வருட்டிற்றிகைக்கும்வசிக்கிற்றுளங்குமனமகிழ்ந்து
தெருட்டிற்றெளியலள்செப்பும்வகையில்லைசீரருக்கன்
குருட்டிற்புகச்செற்றகோன்புலியூர்குறுகார்மனம்போன்
றிருட்டிற்புரிகுழலாட்கெங்ஙனேசொல்லியேகுவனே. (உஎ0)

பிரிந்தமைகூறல்.

சு. பே. அருளுயிர்ப்பிரிவின் பாரவுரைத்தது.

சு. சி. தேங்கமழ் குழலிக்குப்
பாங்கி பகர்ந்தது.

நல்லாய்நமக்குற்றதென்னென்றுரைக்கேனமர்தொடுத்த
வெல்லாநிதியுடன்விடுப்பானிமையோரிறைஞ்சு
மல்லார்கழலழல்வண்ணர்வண்டில்லைதொழார்களல்லாற்
செல்லாவழற்கடமின்றுசென்றார்நஞ்சிறந்தவரே. (உஎக)

நெஞ்சொடுகூறல்.

எ. பே. உயிர்ப்பரிவாற்சிவன் கருணையுற்றது.

எ. சி. கல்வரைநாடன் சொல்லாதகல
மின்னொளிமருங்கு றன்னொளிதளர்ந்தது.

அருந்தும்விடமணியாமணிகண்டன்மற்றண்டர்க்கெல்லா
மருந்துமமிர்தமுமாகுமுன்னோன்றில்லைவாழ்த்தும்வள்ள
திருந்துங்கடநெறிசெல்லுமிவ்வாறுசிதைக்குமென்றால்
வருந்தும்மடநெஞ்சமேயென்னயாமினிவாழ்வகையே. (௨எ௨)

நெஞ்சொடுவருந்தல்.

அ. பே. உயிர்க்கேகருணை யுற்றின்பானது.

அ. சி. வெற்ப னீங்கப்
பொற்பு வாடியது.

ஏர்ப்பின்னைதோண்முன்மணந்தவனேத்தவெழிறிகழுஞ்
சீர்ப்பொன்னைவென்றசெறிகழலோன்றில்லைச்சூழ்பொழில்வாய்க்
கார்ப்புன்னைபொன்னவிழ்முத்தமணலிற்கலந்தகன்றார்
தேர்ப்பின்னைச்சென்றவென்னெஞ்சென்கொலாமின்றுசெய்கின்றதே

வருத்தங்கண்டுரைத்தல்.

கூ. பே. அருள்சிவன்கருணைக் குருகிநோக்கியது.

கூ. சி. அழலுறுகோதையின் விழுமுறுபேதையை
நீங்கலரெனப் பாங்கிபகர்ந்தது.

கானமர்குன்றர்செவியுறவாங்குகணைதுணையா
மானமர்நோக்கியர்நோக்கெனமாநற்றொடைமடக்கும்
வானமர்வெற்பர்வண்டில்லையின்மன்னைவணங்கலர்போற்
றேனமர்சொல்லிசெல்லார்செல்லல்செல்லறிருநுதலே. (௨எச)

வழியொழுகிவற்புறுத்தல்.

கo. பே. கருணையிங்ஙனமாயினுயிரு
மின்பேயாருமென்றன்புறவுரைத்தது.

கo. சி. சூழிருங் கூந்தலைத்
தோழி தெருட்டியது.

மதுமலர்ச்சோலையும்வாய்மையுமன்புமருவிவெங்கான்
கதுமெனப்போக்குநிதியினருக்குமுன்னிக்கலுழ்ந்தா
னெதுமலர்நோக்கமொர்மூன்றுடையோன்றில்லைநோக்கலர்போ
லிதுமலர்ப்பாவைக்கென்னோவந்தவாறென்பரேந்திழையே. (உஎரு)

வன்புறையெதிரழிந்திரங்கல்.

கக. பே. பின்னுஞ்சிவமே பெருங்கருணையாயது.

கக. சி. வன்கறைவேலோன் வரைவுநீட
வன்புறையழிந்தவண் மனமழுங்கியது.

வந்தாய்பவரையில்லாமயின்முட்டையிளையமந்தி
பந்தாடிரும்பொழிற்பல்வரைநாடன்பண்போவினிதே
கொந்தார்நறுங்கொன்றைக்கூத்தன்றென்றில்லைதொழார்குழுப்போற்
சிந்தாகுலமுற்றுப்பற்றின்றிநையுந்திருவினர்க்கே. (உஎசு)

வாய்மைகூறிவருத்தந்தணித்தல்.

கஉ. பே. உயிர்ப்பரிவெடுத்தருளுவந்தரற்குரைத்தது.

கஉ. சி. வேற்றடங் கண்ணியை
யாற்று வித்தது.

மொய்யென்பதேயிழைகொண்டவனென்னைத்தன்மொய்கழற்காட்
செய்யென்பதேசெய்தவன்றில்லைச்சூழ்கடற்சேர்ப்பர்சொல்லும்
பொய்யென்பதேகருத்தாயிற்புரிகுழற்பொற்றொடியாய்
மெய்யென்பதேதுமற்றில்லைகொலாமிவ்வியலிடத்தே. (உஎஎ)

## தேருறுதுபுலம்பல்.

கங. பே. அருளியம்பியுமரன் கருணைமிக்கெழுந்தது.

கங. சி. தீதறுகண்ணி தேற்றத்தேருறு
போதுறுகுழலி புலம்பியது.

மன்செய்தமுன்னுண்மொழிவழியேயன்னவாய்மைகண்டு
மென்செய்தநெஞ்சுநிறையுநில்லாவெனதின்னுயிரும்
பொன்செய்தமேனியன்றில்லையுறாரிற்பொறையரிதா
முன்செய்ததீங்குகொல்காலத்துநீர்மைகொன்மொய்குழலே. (உஎஅ)

## காலமறைத்துரைத்தல்.

கச. பே. அருள்சிவநோக்கிக் காலமீதென்றது.

கச. சி. காந்தள்கருவுறக் கடவுண்மழைக்கென்
றேந்திழைப்பாங்கி யினிதியம்பியது.

கருந்தினையோம்பக்கடவுட்பராவிநமர்கலிப்பச்
சொரிந்தனகொண்மூச்சுரந்ததன்பேரருளாற்றொழும்பிற்
பரிந்தெனையாண்டசிற்றம்பலத்தான்பரங்குன்றிற்றுன்றி
விரிந்தனகாந்தள்வெருவரல்காரெனவெள்வளையே. (உஎகூ)

## தூதுவரவுரைத்தல்.

கரு. பே. உயிர்க்குக்கரணம்யான் வேறிலையென்றது.

கரு. சி. ஆங்கொரு தூதுவரப்
பாங்கிகண் டுரைத்தது.

வென்றவர்முப்புரஞ்சிற்றம்பலத்துணின்றாடும்வெள்ளிக்
குன்றவர்குன்றுவருடரக்கூடினர்நம்மகன்று
சென்றவர்தூதுகொல்லோவிருந்தேமையுஞ்செல்லல்செப்பா
நின்றவர்தூதுகொல்லோவந்துதோன்றுநிரைவளையே. (உஅ0)

### தூதுகண்டழுங்கல்.

கசு. பே. காணமொன்றுண்டோ வென்றருள்கருதியது.

கசு. சி. அயலுற்ற தூதுவரக்
கயலுற்றகண்ணி மயலுற்றது.

வருவனசெல்வனதூதுகளேதிலவான்புலியூ
ரொருவனதன்பரினின்பக்கலவிகளுள்ளுருகத்
தருவனசெய்தெனதாவிகொண்டேகியென்னெஞ்சிற்றம்மை
யிருவினகாதலரேதுசெய்வானின்றிருக்கின்றதே. (உஅக)

### மெலிவுகண்டுசெவிலிகூறல்.

கஎ. பே. திரோதைசிவத்திற் சேர்ந்ததெனத்திரும்பியது.

கஎ. சி. வண்டமர்புரிகுழ லொண்டொடிமெலிய
வாடாநின்ற கோடாய்கூறியது.

வேயினமென்றோண்மெலிந்தொளிவாடிவிழிபிறிதாய்ப்
பாயினமேகலைபண்டையளல்லள்பவளச்செவ்வி
யாயினவீசனமரர்க்கமரன்சிற்றம்பலத்தான்
சேயினதாட்சியிற்பட்டனளாமித்திருந்திழையே. (உஅஉ)

### கட்டுவைப்பித்தல்.

கஅ. பே. திரோதைசிவத்திற்சேர் சின்னங்கண்டது.

கஅ. சி. மால்கொண்ட கட்டுக்
கால் கொண்டது.

சுணங்குற்றகொங்கைகள்சூதற்றிலசொற்றெளிவுற்றில
குணங்குற்றங்கொள்ளும்பருவமுறாள்குறுகாவசுரர்
நிணங்குற்றவேற்சிவன்சிற்றம்பலநெஞ்சுறாதவர்போ
லணங்குற்றநோயறிவுற்றுரையாடுமினன்னையரே. (உஅங)

## கலக்கமுற்றுநிற்றல்.

கக. பே. சிவத்துயிர்சேர்ந்த திறமுலகறித
லருள்கண்டிதுவழி யாமோவென்றது.

கக. சி. தெய்வத்திற் றெரியுமென
எவ்வத்தின் மெலிவுற்றது.

மாட்டியன்றேயெம்வயிற்பெருநாணினிமாக்குடிமா
சூட்டியன்றேநிற்பதோடியவாறிவளுள்ளமெல்லாங்
காட்டியன்றேநின்றதில்லைத்தொல்லோனைக்கல்லாதவர்போல்
வாட்டியன்றேர்குழலார்மொழியாதனவாய்திறந்தே. (உ௮௪)

## கட்டுவித்திகூறல்.

உ0. பே. சிவமுயிருற்ற திவ்வியந்தெரிந்தது.

உ0. சி. கட்டு வித்தி
விட்டு ரைத்தது.

குயிலிதன்றேயென்னலாஞ்சொல்லிகூறன்சிற்றம்பலத்தா
ணியலிதன்றேயென்னலாகாவிறைவிறற்சேய்கடவு
மயிலிதன்றேகொடிவாரணங்காண்கவன்சூர்தடிந்த
வயிலிதன்றேயிதன்றேநெல்லிற்றோன் றுமவன்வடிவே. (உ௮௫)

## வேலனையழைத்தல்.

உக. பே. திரோதைசிவத்தின் செயல்வெளியாக்கல்.

உக. சி. வெறியாடிய வேலனைக்கூஉய்
நெறியார்குழலி தாயர்நின்றது.

வேலன்புகுந்துவெறியாடுகவெண்மறியறுக்க
காலன்புகுந்தவியக்கழல்வைத்தெழிற்றில்லைநின்ற
மேலன்புகுந்தென்கணின்றோனிருந்தவெண்காடனைய
பாலன்புகுந்திப்பரிசினினிற்பித்தபண்பினுக்கே. (உ௮௬)

## இன்னலெய்தல்.

உஉ. பே. எங்குநாமன்றி யில்லையின்பென்றது.

உஉ. சி. ஆடியவெறியிற் கூடுவதறியாது
நன்னறுங்கோதை யின்னலெய்தியது.

அயர்ந்தும்வெறிமறியாவிசெகுத்தும்விளர்ப்பயலார்
பெயர்ந்துமொழியாவிடினென்னைபேசுவபேர்ந்திருவ
ருயர்ந்தும்பணிந்துமுணரானதம்பலமுன்னலரிற்
றுயர்ந்தும்பிறிதின்றெழியினென்னுதுந் துறைவனுக்கே. (உஅஎ)

## வெறிவிலக்குவிக்கநினைதல்.

உங. பே. யாமன்றிப்பிறவில்லையென்றன்பியம்பியது.

உங. சி. அயறருவெறியின் மயறருமென
விலக்கலுற்ற குலக்கொடிநினைந்தது.

சென்றார்திருத்தியசெல்லனின்றார்கள்சிதைப்பரென்று
னன்றுவழுகிதென்றேயிறைதில்லைதொழாரினைந்து
மொன்றுமிவட்குமொழிதல்கில்லேன்மொழியாதுமுய்யேன்
குன்றார்துறைவர்க்குறுவேனுரைப்பணிக்கூர்மறையே. (உஅஅ)

## அறத்தொடுநிற்றலையுரைத்தல்.

உச. பே. சிவமேயருட்குயிர்ச் செய்தியுரைத்தது.

உச. சி. வெறித்தலைவெரீஇ வெருவருதோழிக்
கறத்தொடுநின்ற வாயிழையுரைத்தது.

யாயுந்தெறுகவயலவரேசுகவூர்நகுக
நீயுமுனிகநிகழ்ந்ததுகூறுவலென்னுடைய
வாயுமனமுபிரியாவிறைதில்லைவாழ்த்துநர்போற்
றூயனினக்குக்கடுஞ்சூடருவன்சுடர்க்குழையே. (உஅகூ)

## அறத்தொடுநிற்றல்.

உரு. பே. அருட்சிவமே யெடுத்தியம்பியது.

உரு. சி. செய்தவெறியி னெய்துவதறியா து
நிறத்தொடித்தோழிக் கறத்தொடுநின்றது.

வண்டலுற்றேமெங்கண்வந்தொருதோன்றல்வரிவளையீ
ருண்டலுற்றேமென்றுநின்றதொர்போழ்துடையான்புலியூர்க்
கொண்டலுற்றேறுங்கடல்வரவெம்முயிர்கொண்டுதந்து
கண்டலுற்றேர்நின்றசேரிச்சென்றானோர்கழலவனே. (உகூ0)

## ஐயந்தீரக்கூறல்.

உசு. பே. அருளேசிவத்தை வியந்தெடுத்துரைத்தது.

உசு. சி. விலங்குதல்விரும்பு மேதகுதோழி
யலங்கற்குழலிக் கறியவுரைத்தது.

குடிக்கலர்கூறினுங்கூறுவியன்றில்லைக்கூத்தனதாள்
முடிக்கலராக்குமொய்பூந்துறைவற்குமுரிபுருவ
வடிக்கலர்வேற்கண்ணிவந்தனசென்றுநம்யாயறியும்
படிக்கலராமிவையென்னுமறைக்கும்பரிசுகளே. (உகூக)

## வெறிவிலக்கல்.

உஎ. பே. அருள்பிறிதொன்று மிலையுயிர்சிவமே
யாதல்கண்ட வேதியம்பியது.

உஎ. சி. அறத்தொடுநின்ற திறத்தினிற்பாங்கி
வெறிவிலக்கிப் பிறிதுரைத்தது.

விதியுடையாருண்கவேரிவிலக்கலமம்பலத்துப்
பதியுடையான்பரங்குன்றினிற்பாய்புனல்யாமொழுகக்
கதியுடையான்கதிர்த்தோணிற்கவேறுகருதுநின்னின்
மதியுடையார்தெய்வமேயில்லைகொல்லினிவையகத்தே. (உகூஉ)

## செவிலிக்குத்தோழியறத்தொடுநிற்றல்.

உஅ. பே. திரோதைக்கருளே சென்றியம்பியது.

உஅ. சி. சிறப்புடைச் செவிலிக்
கறத்தொடு நின்றது.

மனக்களியாயின்றியான்மகிழ்தூங்கத்தன்வார்கழல்க
ளெனக்களியாநிற்குமம்பலத்தோனிருந்தண்கயிலைச்
சினக்களியானைகடிந்தாரொருவர்செவ்வாய்ப்பசிய
புனக்கிளியாங்கடியும்வரைச்சாரற்பொருப்பிடத்தே. (உகங)

## நற்றாய்க்குச்செவிலியறத்தொடுநிற்றல்.

உகூ. பே. திரோதைபரைக்குச் சென்றியம்பியது.

உகூ. சி. கற்பினின்வாழாமை நிற்பித்தெடுத்தோள்
குலக்கொடிதாயர்க் கறத்தொடுநின்றது.

இளையாளிவளையென்சொல்லிப்பரவுதுமீரெயிறு
முளையாவளவின்முதுக்குறைந்தாண்முடிசாய்த்திமையோர்
வளையாவழுத்தாவருதிருச்சிற்றம்பலத்துமன்னன்
றிளையாவருமருவிக்கயிலைப்பயில்செல்வியையே. (உகச)

## தேர்வரவுகூறல்.

ஙO. பே. அருளுயிர்வரல்சிவற் கடுத்தியம்பியது.

ஙO. சி. மணிநெடுந்தேரோ னணிதினின்வருமென
யாழியன்மொழிக்குத் தோழிசொல்லியது.

கள்ளினமார்த்துண்ணும்வண்கொன்றையோன்றில்லைக்கார்க்கடல்வா[ய்ப்
புள்ளினமார்ப்பப்பொருதிரையார்ப்பப்புலவர்கடம்
வள்ளினமார்ப்பமதுகரமார்ப்பவலம்புரியின்
வெள்ளினமார்ப்பவரும்பெருந்தேரின்றுமெல்லியலே. (உகரு)

மணமுரசுகேட்டுமகிழ்ந்துரைத்தல்.

௩க. பே. சிவமணமுயிர்பெற லருள்கண்டுமகிழ்ந்தது.

௩க. சி. நிலங்காவலர் நீண்மணத்தி
னலங்கண்டவர் நயந்துரைத்தது.

பூரணபொற்குடம்வைக்கமணிமுத்தம்பொன்பொதிந்த
தோரணநீடுகதூரியமார்க்கதொன்மாலயற்குங்
காரணனேரணிகண்ணுதலோன்கடற்றில்லையன்ன
வாரணவும்முலைமன்றலென்றேங்குமணமுரசே. (உகசு)

ஐயுற்றுக்கலங்கல்.

௩உ. பே. இன்னுமுயிர்க்கிடையூ றுண்டோவென்றது.

௩உ. சி. நல்லவர்முர்சுமற் றல்லவர்முரசெனத்
தெரிவரிதென வரிவைகலங்கியது.

அடற்களியாவற்குமன்பர்க்களிப்பவன்றுன்பவின்பம்
படக்களியாவண்டறைபொழிற்றில்லைப்பரமன்வெற்பிற்
கடக்களியானைகடிந்தவர்க்கோவன்றிநின்றவர்க்கோ
விடக்களியாநம்விழுநகரார்க்கும்வியன்முரசே. (உகஎ)

நிதிவரவுகூறுநிற்றல்.

௩௩. பே. உடல்பொருளுயிரின் புவந்ததென்றது.

௩௩. சி. மகிழ்த்ருமனத்தொடு வண்புகழ்த்தோழி
திகழ்நிதிமடந்தைக்குத் தெரியவுரைத்தது.

என்கடைக்கண்ணினும்யான்பிறவேத்தாவகையிரங்கித்
தன்கடைக்கண்வைத்ததண்டில்லைச்சங்கரன்சூழ்கயிலைக்
கொன்கடைக்கண்டரும்யானைகடிந்தார்கொணர்ந்திறுத்தார்
முன்கடைக்கண்ணிதுகாண்வந்துதோன்றுமுழுநிதியே. (உகஅ)

## கசு. மணஞ்சிறப்புரைத்தல்.

மணஞ்சிறப்புரைத்தலாவது உயிர் சிவமணம் பெற்றுண்மையாதல். இது ஒன்பது துறையுடைத்து. அவைவருமாறு:—

மணமுரசுகூறன் மகிழ்ந்துரைத்தல்லொடு
வழிபாடுகூறல் வாழ்க்கைநலங்கூறல்
காதல்கட்டுரைத்தல் கற்பறிவித்தல்
கற்புப்பயப்புரைத்தல் காதன்மருவுரைத்தல்
கலவியுரைத்தல் கருதியவொன்பது
நலமிகுமணமிவை நாடுக்காலே.

### மணமுரசுகூறல்.

க. பே. உயிர்சிவமணஞ்சிவத்துக் கருளேயுரைத்தது.

க. சி. வரைவுதோன்ற மகிழ்வுறுதோழி
நிரைவளைக்கு நின்றுரைத்தது.

பிரசந்திகழும்வரைபுரையானையின்பீடழித்தார்
முரசந்திகழுமுருகியநீங்குமெவர்க்குமுன்ற
மரசம்பலத்துநின்றாடும்பிரானருள்பெற்றவரிற்
புரைசந்தமேகலையாய் துயர்தீரப்புகுந்துநின்றே. (உகூகூ)

### மகிழ்ந்துரைத்தல்.

உ. பே. அருளேசிவனநாதிக் கருணைமணம்வியந்தது.

உ. சி. மன்னியகடியிற் பொன்னறுங்கோதையை
நன்னுதற்றோழி தன்னின்மகிழ்ந்தது.

இருந்துதியென்வயிற்கொண்டவன்யானெப்பொழுதுமுன்னு
மருந்துதிசைமுகன்மாற்கரியோன்றில்லைவாழ்த்தினர்போ
லிருந்துதிவண்டனவாலெரிமுன்வலஞ்செய்திடப்பா
லருந்துதிகாணுமளவுஞ்சிலம்பனருந்தழையே. (௩00)

## வழிபாடுகூறல்.

ங. பே. அருடிரோதைக்குயி ரத்துவிதஞ்செப்பல்.

ங. சி. மணமனைகாண வந்தசெவிலிக்குத்
துணைமலர்க்குழலி தோழிசொல்லியது.

சீரியலாவியும்யாக்கையுமென்னச்சிறந்தமையாற்
காரியல்வாட்கண்ணியெண்ணகலார்கமலங்கலந்த
வேரியுஞ்சந்தும்வியறந்தெனக்கற்பினிற்பரன்னே
காரியல்கண்டர்வண்டில்லைவணங்குமெங்காவலரே. (௩0க)

## வாழ்க்கைநலங்கூறல்.

ச. பே. திரோதைபரைக்குயிர் சேரின்புரைத்தது.

ச. சி. மணமனைச்சென்று மகிழ்தருசெவிலி
யணிமனைக்கிழத்திக் கதன்சிறப்புரைத்தது.

தொண்டினமேவுஞ்சுடர்க்கழலோன்றில்லைத்தொன்னகரிற்
கண்டினமேவுமினியவணின்கொழுநன்செழுமென்
றண்டினமேவுதிண்டோளவன்யானவடற்பணிவோள்
வண்டினமேவுங்குழலாளயன்மன்னுமிவ்வயலே. (௩0உ)

## காதல்கட்டுரைத்தல்.

ரு. பே. திரோதைபரைக்குயிர் செய்பணியுரைத்தது.

ரு. சி. சோதி வேலவன்
காதல்கட் டுரைத்தது.

பொட்டணியானுதல்போயிறும்பொய்போலிடையெனப்பூ
ணிட்டணியான்றவிசின்மலரன்றிமிதிப்பக்கொடான்
மட்டணிவார்குழல்வையான்மலர்வண்டுறுதலஞ்சிக்
கட்டணிவார்சடையோன்றில்லைபோலிதன்காதலனே. (௩0௩)

## கற்பறிவித்தல்.

சு. பே. திரோதைபரைக்கின் பாகவறத்திற
முவமைத்திறத்தா லுவந்துரைத்தது.

சு. சி. விற்பொலி நுதலி
கற்பறி வித்தது.

தெய்வம்பணிகழலோன் றில்லைச்சிற்றம்பலமனையா
டெய்வம்பணிந்தறியாளென் றுநின் றுதிறைவழங்காத்
தெய்வம்பணியச்சென்ரு லுமன் வந்தன் றிச்சேர்ந்தறியான்
பவ்வம்பணிமணியன் னூர்பரிசின்னபான்மைகளே. (௩0௪)

## கற்புப்பயப்புரைத்தல்.

எ. பே. போதமின்புயிர்க்கெனப் பரைக்குரைத்தது.

எ. சி. கற்புப் பயந்த
அற்புத முரைத்தது.

சிற்பந்திகழ்தருதிண்மதிற்றில்லைச்சிற்றம்பலத்துப்
பொற்பந்தியன்னசடையவன்பூவணமன்னபொன்னின்
கற்பந்திவாய்வடமீனுங்கடக்கும்படிகடந்து
மிற்பந்திவாயன் றிவைகல்செல்லாதவனீர்ங்களிறே. (௩0௫)

## மருவுதலுரைத்தல்.

அ. பே. உயிரின்பொன்ருய் மருவுதலுரைத்தது.

அ. சி. இருவர் காதலு
மருவுத லுரைத்தது.

மன்னவன்றெம்முனைமேற்செல் லுமாயினுமால்ரியே
றன்னவன்றேர்புறத்தல்கல்செல்லா துவரகுணனுந்
தென்னவனேத்துசிற்றம்பலத்தான்மற்றைத்தேவர்க்கெல்லா
முன்னவன் மூவலன் னூருமற்ருேர்தெய்வமுன்னலளே. (௩0௬)

கலவியின்பங்கூறல்.

கூ. பே. ஒன்றற்றிரண்டற் ஞென்றுமுலவா
தொழியா ததையுரைத்தது.

கூ. சி. நன்னுதன்மடந்தை தன்னலங்கண்டு
மகிழ்தூங்குளத்தோ டிகுளைகூறியது.

ஆனந்தவெள்ளத்தழுந்துமொராருயிரீருருக்கொண்
டானந்தவெள்ளத்திடைதிளைத்தாலொக்குமம்பலஞ்சே
ரானந்தவெள்ளத்தறைகழலோனருள்பெற்றவரி
னானந்தவெள்ளம்வற்றாதுமுற்றாதிவ்வணிநலமே. (ருOஎ)

## உ௦. ஓதற்பிரிவு.

ஓதற்பிரிவாவது பூரணவின்பத் திறம்பாராட்டல். அது நான்குதுறையுடைத்து. அவைவருமாறு:—

கல்விநலங்கூறல் பிரிவுநினைவுரைத்தல்
கலக்கங்கண்டுரைத்தல் காதலர்தமது
வாய்மொழிகூறல் வருவனநான்குந்
தீமையில்கல்வி தேருங்காலே.

கல்விநலங்கூறல்.

க. பே. இன்பனுபோகனூற் பாராட்டென்னை
யன்பினருளே யரற்கறிவுறுத்தல்.

க. சி. கல்விக்ககல்வர் செல்வத்தவரெனச்
செறிகுழற்பாங்கிக் கறிவறிவித்தது.

சீரளவில்லாத்திகழ்தருகல்விச்செம்பொன்வரையி
னாரளவில்லாவளவுசென்றாரம்பலத்துணின்ற
வோரளவில்லாவொருவனிருங்கழலுன்னினர்போ
லேரளவில்லாவளவினராகுவரேந்திழையே. (ருOஅ)

### பிரிவுநினைவுரைத்தல்.

உ. பே. அறியார்போன்றிருக்கு மனுபவவிலக்கண
மென்றருளின்புக் கன்பற்றதுரைத்தது.

உ. சி. கல்விக்ககல்வர் செல்வத்தவரெனப்
பூங்குழன்மடந்தைக்குப் பாங்கிபகர்ந்தது.

வீதலுற்றார்தலைமாலையன்றில்லைமிக்கோன்கழற்கே
காதலுற்றார்நன்மைகல்விசெல்வீதருமென்பதுகொண்
டோதலுற்றாருற்றுணர்தலுற்றார்செல்லன்மல்லழற்கான்
போதலுற்றார்நின்புணர்முலையுற்றபுரவலரே. (௩0௯)

### கலக்கங்கண்டுரைத்தல்.

௩. பே. இன்பிற்பிரிவிலை யென்றருள்கண்டது.

௩. சி. ஓதற்ககல்வர் மேதக்கவரெனப்
பூங்கொடிகலக்கம் பாங்கிகண்டுரைத்தது.

கற்பாமதிற்றில்லைச்சிற்றம்பலமதுகாதல்செய்த
விற்பாவிலங்கலெங்கோனைவிரும்பலர்போலவன்பர்
சொற்பாவிரும்பினரென்னமெல்லோதிசெவிப்புறத்துக்
கொற்பாவிலங்கிலைவேல்குளித்தாங்குக்குறுகியதே. (௩க0)

### வாய்மொழிகூறித்தலைமகள்வருந்தல்.

ச. பே. பிரிவொருகாலு மின்றெனவருளுக்
கின்பேயன்பா யெடுத்தெடுத்துரைத்தது.

ச. சி. தீதறுகல்விக்குச் செல்வன்செல்லுமெனப்
போதறுகுழலி புலம்பியது.

பிரியாமையுமுயிரொன்றாவதும்பிரியிற்பெரிதுந்
தரியாமையுமொருங்கேநின்றுசாற்றினர்தையன்மெய்யிற்
பிரியாமைசெய்துநின்றோன்றில்லைப்பேரியலூரரன்ன
புரியாமையுமிதுவேயினியென்னும்புகல்வதுவே. (௩கக)

---

## உக. காவற்பிரிவு.

காவற்பிரிவாவது இன்பத்திறத்தை யெங்குங்காண்டல். அது இரண்டுதுறையுடைத்து. அவை வருமாறு:—

பிரிவறிவித்தல் பிரிவுகேட்டிரங்கல்
வருபவையிரண்டும் வையங்காவல்.

### பிரிவறிவித்தல்.

க. பே. உலகம்யாவு மின்பாய்க்காணு
மருமையருளே யறிந்துரைத்தது.

க. சி. இருநிலங்காவற் கேகுவர்நமரெனப்
பொருசுடர்வேலோன் போக்கறிவித்தது.

மூப்பானிளையவன்முன்னவன்பின்னவன்முப்புரங்கள்
வீப்பான்வியன்றில்லையானருளால்விரிநீருலகங்
காப்பான்பிரியக்கருதுகின்றார்நமர்கார்க்கயற்கட்
பூப்பானலமொளிரும்புரிதாழ்குழற்பூங்கொடியே. (ருகஉ)

### பிரிவுகேட்டிரங்கல்.

உ. பே. இன்பமநாதி யியல்பெடுத்தருளி
யன்பிற்கருணை யெடுத்தியம்பியது.

உ. சி. மன்னவன்பிரிவு நன்னுதலறிந்து
பழங்கணெய்தி யழுங்கல்சென்றது.

சிறுகட்பெருங்கைத்திண்கோட்டுக்குழைசெவிச்செம்முகமாத்
தெறுகட்டழியமுன்னுய்யச்செய்தோர்கருப்புச்சிலையோ
னுறுகட்டழலுடையோனுறையம்பலமுன்னலரிற்
றுறுகட்புரிகுழலாயிதுவோவின்றுசூழ்கின்றதே. (ருகங)

## உஉ. பகைதணிவினைப்பிரிவு.

பகைதணிவினைப்பிரிவாவது இன்பக்கணமன்றி வேறிலை யுலகென்றல். அது இரண்டுதுறையுடைத்து. அவைவருமாறு:—

பிரிவுகூறல் வருத்தந்தணித்த
லிருபகைதணித்தற் கேகலென்ப.

பிரிவுகூறல்.

க. பே. உலகிலின்பன்றி யறியாமையிலையென்
றனுபவமுற்ற தருளேசெப்பல்.

க. சி. துன்னுபகைத்தணிப்ப மன்னவன்பிரிவு
நன்னறுங்கோதைக்கு முன்னிமொழிந்தது.

மிகைதணித்தற்கரிதாமிருவேந்தர்வெம்போர்மிடைந்த
பகைதணித்தற்குப்படர்தலுற்றூர்நமர்பல்பிறவித் [ல்வாய்
தொகைதணித்தற்கென்னையாண்டுகொண்டோன்றில்லைச்சூழ்பொழி
முகைதணித்தற்கரிதாம்புரிதாழ்தருமொய்குழலே. (௩கச)

வருத்தந்தணித்தல்.

உ. பே. வேறுய்க்காண்ட லனுபவமன்றென
வருளேயுருக்கத் தான்மிகவறிந்தது.

உ. சி. மணிப்பூண்மன்னவன் றணப்பதில்லை
அஞ்சல்பொய்யென வஞ்சியைத்தணித்தது.

நெருப்புறுவெண்ணெயுநீருறுமுப்புமெனவிங்ஙனே
பொருப்புறுதோகைபுலம்புறல்பொய்யன்பர்போக்குமிக்க
விருப்புறுவோரைவிண்ணோரின்மிகுத்துநண்ணார்கழியத்
திருப்புறுசூலத்தினோன்றில்லைபோலுந்திருநுதலே. (௩கரு)

## உ௩. வேந்தற்குற்றுழிப்பிரிவு.

வேந்தற்குற்றுழிப் பிரிவாவது இன்பாராமை யன்பேயென்றல். அது பதினாறு துறையுடைத்து. அவைவருமாறு:—

பிரிந்தமைகூறல் பிரிவாற்ருமை
கார்மிசைவத்தல் காரைநோக்கி
வருந்தியுரைத்தன் மலர்க்குழலரிவை
கூதிர்கண்டுகவறல் குளிர்முன்பனிக்கவ
ஞெந்துகூற ஞேக்கிப்பின்பனிக்
கிரங்கியுரைத்த லிளவேனில்கண்டவ
ளின்னலெய்த லிதுவவர்குறித்த
பருவமாமென வரவுகூறல்
பருவமறைத்துரைத்தன் மறுத்துரைத்தல்லொடு
தேர்வரவுகூறல் விணமுற்றிநினைத
னிலைமைநினைந்துரைத்தன் முகிலொடுகூறல்
வரவெடுத்துரைத்தன் மறவாமைகூறன்
மற்றிவையீரெட்டு முற்றுழிப்பிரிவாம்.

பிரிந்தமைகூறல்.

க. பே. அருளுயிரின்ப மடுத்தோர்க்குரிமை
யென்னவுதவியா மென்றரற்குரைத்தது.

க. சி. விறல்வேந்தர் வெம்முனைக்கட்
டிறல்வேந்தர் செல்வரென்றது.

போதுகுலாயபுனைமுடிவேந்தர்தம்போர்முனைமேன்
மாதுகுலாயமென்ஞேக்கிசென்ருர்நமர்வண்புலியூர்க்
காதுகுலாயகுழையெழிலோனைக்கருதலர்போ
லேதுகொலாய்விளைகின்றதின்ருென்ஞரிமெதிலே. (௩கசு)

பிரிவாற்ருமைகார்மிசைவைத்தல்.

உ. பே. அனுபவமடுத்தோர்க் கறிவித்திடவு
மன்பேயின்பா யங்குங்கலந்தது.

உ. சி. வேந்தற்குற்றுழி விறலோன்பிரிய
ஏந்திழைபாங்கிக் கெடுத்துரைத்தது.

பொன்னிவளைத்தபுனல்சூழ்நிலவிப்பொலிபுலியூர்
வன்னிவளைத்தவளர்சடையோனைவணங்கலர்போற்
றுன்னிவளைத்தநந்தோன்றற்குப்பாசறைத்தோன்றுங்கொலோ
மின்னிவளைத்துவிரிநீர்கவரும்வியன்முகிலே. (௩கஎ)

வானேக்கிவருந்தல்.

௩. பே. அனுபவம்பிறருக் கடுத்ததுகண்டவ்
வின்பப்பிரிவை யெண்ணியன்பாயது.

௩. சி. மானேக்கி வடிவுநினைந்தோன்
வானேக்கி வருந்தியது.

கோலித்திகழ்சிறகொன்றிெனுடுக்கிப்பெடைக்குருகு
பாலித்திரும்பனிபார்ப்பொடுசேவல்பயிலிரவின்
மாலித்தனையறியாமறையோனுறையம்பலமே
போலித்திருநுதலாட்கென்னதாங்கொலென்போதரவே. (௩கஅ)

கூதிர்கண்டுகவறல்.

ச. பே. இன்பன்பாகி யிருத்தலானுயிரை
யன்பேபிரிவாற் ருமையியம்பல்.

ச. சி. இருங்கூதி ரெதிர்வுகண்டு
கருங்குழலி கவலையுற்றது.

கருப்பினமேவும்பொழிற்றில்லைமன்னன்கண்ணூரருளால்
விருப்பினமேவச்சென்ருர்க்குஞ்சென்றல்குங்கொல்வீழ்பனிவாய்
நெருப்பினமேநெடுமாலெழிருேன்றச்சென்ருங்குநின்ற
பொருப்பினமேறித்தமியரைப்பார்க்கும்புயலினமே. (௩கக)

முன்பனிக்குநொந்துரைத்தல்.

ரு. பே. பிரிவன்புக்கிலையெனப் பரையைநொந்தது.

ரு. சி. ஆன்றபனிக் காற்றுதழிந்
தீன்றவளை யேழைநொந்தது.

சுற்றினவீழ்பனிதூங்கத்துவண்டுதுயர்கவென்று
பெற்றவளேயெனைப்பெற்றாள்பெடைசிறகானொடுக்கிப்
புற்றிலவாளரவன்றில்லைப்புள்ளுந்தம்பிள்ளைதழீஇ
மற்றினஞ்சூழ்ந்துதுயில்ப்பெறுமிம்மயங்கிருளே. (ஙஉo)

பின்பனிநினைந்திரங்கல்.

சு. பே. பிரிவுண்டேலின்பம் பெறலாமென்றுயி
ரின்பநோக்கி யெடுத்துரைத்தது.

சு. சி. இரும்பனியி னெதிர்வுகண்டு
சுரும்பிவர்குழலி துயரநினைந்தது.

புரமன்றயரப்பொருப்புவில்லேந்திப்புத்தேளிர்நாப்பட்
சிரமன்றயனைச்செற்றோன்றில்லைச்சிற்றம்பலமனையாள்
பரமன்றிரும்பனிபாரித்தவாபரந்தெங்கும்வையஞ்
சரமன்றிவான்றருமேலொக்குமிக்கதமியருக்கே. (ஙஉக)

இளவேனில்கண்டின்னலெய்தல்.

எ. பே. உயிரின்பின்பே யுன்னியுரைத்தல்.

எ. சி. இன்னிளவேனின் முன்னுவதுகண்டு
மென்னகைப்பேதை யின்னலெய்தியது.

வாழும்படியொன்றுங்கண்டிலம்வாழியிம்மாம்பொழிற்றேன்
சூழுமுகச்சுற்றும்பற்றினவாற்றெண்டையங்கனிவா
யாழின்மொழிமங்கைபங்கன்சிற்றம்பலமாதரியாக்
கூழின்மலிமனம்போன்றிருளாநின்றகோகிலமே. (ஙஉஉ)

## பருவங்காட்டிவற்புறுத்தல்.

அ. பே. அருள்சிவத்துக்குயிர் வரவுநலங்கூறியது.

அ. சி. கார்வருமெனக் கலங்குமாதரைத்
தேர்வருமெனத் தெளிவித்தது.

பூண்பதென்றேகொண்டபாம்பன்புலியூரரன்மிடற்றின்
மாண்பதென்றேயெணவானின்மலருமணந்தவர்தேர்
காண்பதன்றேயின்றுநாளையிங்கேவரக்கார்மலர்த்தேன்
பாண்பதன்றேர்குழலாயெழில்வாய்த்தபனிமுகிலே. (கூஉகூ)

## பருவமன்றென்றுகூறல்.

கூ. பே. அன்புயிர்ப்பருவ மின்பலாவிலையென்றல்.

கூ. சி. காரெனக்கலங்கு மேரெழிற்கண்ணிக்
கின்றுணைத்தோழி யன்றென்றுமறுத்தது.

தெளிதரற்காரெனச்சீரனஞ்சிற்றம்பலத்தடியேன்
களிதரக்கார்மிடற்றோனடமாடக்கண்ணார்முழவந்
துளிதரற்காரெனவார்த்தனவார்ப்பத்தொக்குன்குழல்போன்
றளிதரக்காந்தளும்பாந்தளைப்பாரித்தலர்ந்தனவே. (கூஉச)

## மறுத்துக்கூறல்.

க0. பே. அருளுயிர்ப்பருவ மன்றெனச்சிவமு
முண்டேயன்பது பருவமென்றுரைத்தது.

க0. சி. பருவமென்றென்று பாங்கிபகர
மருவமர்கோதை மறுத்துரைத்தது.

தேன்றிக்கிலங்குகழலழல்வண்ணன்சிற்றம்பலத்தெங்
கோன்றிக்கிலங்குதிண்டோட்கொண்டற்கண்டன்குழையெழிலுண்
போன்றிக்கடிமலர்க்காந்தளும்போந்தவன்கையனல்போற்
றோன்றிக்கடிமலரும்பொய்ம்மையோமெய்யிற்றோன்றுவதே. (கூஉரு)

## தேர்வரவுகூறல்.

கக. பே. அருட்குச்சிவமு மன்புணர்த்துதலா
லுயிர்பிரியாமை வரவெடுத்துரைத்தது.

கக. சி. பூங்கொடி மருளப்
பாங்கி தெருட்டியது.

திருமாலறியாச்செறிகழற்றில்லைச்சிற்றம்பலத்தெங்
கருமால்விடையுடையோன்கண்டம்போற்கொண்டலெண்டிசையும்
வருமாலுடன்மன்பொருந்தறிருந்தமணந்தவர்தேர்
பொருமாலயிற்கணல்லாயின்றுதோன்றுநம்பொன்னகர்க்கே. (௩௨௬)

## வினைமுற்றிநினைதல்.

க௨. பே. அனுபவங்கண்ட வன்புயிர்சிவனது
கருணைமுகநோக்கிக் கசிந்துருகியது.

க௨. சி. பாசறைமுற்றிப் படைப்போர்வேந்தன்
மாசறுபூண்முலை மதிமுகநினைந்தது.

புயலோங்கலர்சடையேற்றவன்சிற்றம்பலம்புகழு
மயலோங்கிருங்களியானைவரகுணன்வெற்பின்வைத்த
கயலோங்கிருஞ்சிலைகொண்டுமென்கோபமுங்காட்டிவருஞ்
செயலோங்கெயிலெரிசெய்தபினின்ருேர்திருமுகமே. (௩௨௭)

## நிலைமைநினைந்துகூறல்.

க௩. பே. சிவம்பிரிவின்றிக் கருணைசெய்திறத்தைப்
போதவருளொடு புகன்றுசென்றது.

க௩. சி. பொற்றொடிநிலைமை மற்றவனினைந்து
திருந்துதேர்ப்பாகற்கு வருந்துபுபுகன்றது.

சிறப்பிற்றிகழ்சிவன்சிற்றம்பலஞ்சென்றுசேர்ந்தவர்தம்
பிறப்பிற்றுனைந்துபெருகுகதேர்பிறங்கும்மொளியார்
நிறப்பொற்புரிசைமறுகினிற்றுன்னிமடநடைப்புள்
ளிறப்பிற்றுயின்றுமுற்றத்திரைதேருமெழினகர்க்கே, (௩௨௮)

முகிலொடுகூறல்.

கச. பே. அன்புக்குமுன்பின் பாரவுயிர்சென்றது.
கச. சி. முனைவற்குற்றுழி வினைமுற்றிவருவோன்
கழுமலெய்திச் செழுமுகிற்குரைத்தது.

அருந்தேரழிந்தனமாலமென்றோலமிடுமிமையோர்
மருந்தேரணியம்பலத்தோன்மலர்த்தாள்வணங்கலர்போற்
றிருந்தேரழிந்துபழங்கண்டருஞ்செல்விசேர்நகர்க்கென்
வருந்தேரிதன்முன்வழங்கேன்முழங்கேல்வளமுகிலே. (நஉகூ)

வரவெடுத்துரைத்தல்.

கரு. பே. பரசமயாதிபாற் சிவமேயாக்கி
யுயிர்வரலருளேபுகன்றது.
கரு. சி. வினைமுற்றிய வேந்தன்வரவு
புனையிழைத்தோழி பொற்றொடிக்குரைத்தது.

பணிவார்குழையெழிலோன்றில்லைச்சிற்றம்பலமனைய
மணிவார்குழன்மடமாதேபொலிகநம்மன்னர்முன்னாப்
பணிவார்திறையும்பகைத்தவர்சின்னமுங்கொண்டுவண்டே
ரணிவார்முரசினொடாலிக்குமாவோடணுகினரே. (நஙo)

மறவாமைகூறல்.

கசு. பே. அறிவுபிறிதாயின் மறதியுண்டென்ன
வருட்குயிரியம்பி யன்பாயினது.
கசு. சி. பாசறைமுற்றிப் பைந்தொடியோடிருந்து
மாசறுதோழிக்கு வள்ளலுரைத்தது.

கருங்குவளைக்கடிமாமலர்முத்தங்கலந்திலங்க
நெருங்குவளைக்கிள்ளைநீங்கிற்றிலணின்றுநான்முகனோ
டொருங்குவளைக்கரத்தானுணராதவன்றில்லையொப்பாய்
மருங்குவளைத்துமன்பாசறைநீடியவைகலுமே. (நஙக)

## உச. பொருள்வயிற்பிரிவு.

பொருள்வயிற் பிரிவாவது தானதுவது தானுகுந் தன்மை. அது இருபது துறையுடைத்து. அவை வருமாறு:—

வாட்டங்கூறல் பிரிவுநினைவுரைத்த
லாற்றாதுபுலம்ப லாற்றாமைகூற
றிணைபெயர்த்துரைத்தல்பொருத்தமறிந்துரைத்த
பிரிந்தமைகூறல் பிரிவாற்றாமையா	[ல்
னிரவுறுதுயரத்திற் கிரங்கியுரைத்த
லிகழ்ச்சிநினைந்தழித லுருவுவெளிப்படுத
னெஞ்சொடுநோத னெஞ்சொடுபுலத்த
னெஞ்சொடுமறுத்த ணாளெண்ணிவருந்த
லேறுவரவுகண் டிரங்கியுரைத்தல்
பருவங்கண் டிரங்கன் முகிலொடுகூற
றேர்வரவுகூற லிளையரெதிர்கோட
லுண்மகிழ்ந்துரைத்த லோதியவிருபது
மாமதிநுதலாய் வான்பொருட்பிரிதல்.

### வாட்டங்கூறல்.

க. பே. பிரிவையுரைக்கின்ற பிரிவிலையாதலா
னீயேயுரையென வருளோடியம்பியது.

க. சி. பிரிவுகேட்ட வரிவைவாட்டம்
நீங்கலுற்றவன் பாங்கிக்குரைத்தது.

முனிவருமன்னருமுன்னுவபொன்னுன் முடியுமெனப்
பனிவருங்கண்பரமன் றிருச்சிற்றம்பலமனையாய்
துனிவருநீர்மையிதென்னென்று தூநீர்தெளித்தளிப்ப
நனிவருநாளிதுவோவென் றுவந்திக்குநன்னுதலே.	(௩௩௨)

பிரிவுநினைவுரைத்தல்.

உ. பே. அனுபவப்பொருளை யளவளாவுதலே
பிரிவெனவின்புக்கருளியம்பியது.

உ. சி. பொருள்வயிற்பிரியும் பொருவேலவனெனச்
சுருளுறுகுழலிக்குத் தோழிசொல்லியது.

வறியாரிருமையறியாரெனமன்னுமாநிதிக்கு
நெறியாரருஞ்சுரஞ்செல்லலுற்றார்நமர்நீண்டிருவ
ரறியாவளவுநின்றோன்றில்லைச்சிற்றம்பலமனைய
செறிவார்கருங்குழல்வெண்ணகைச்செவ்வாய்த்திருநுதலே. (ங௩௩)

ஆற்றாதுபுலம்பல்.

ங. பே. பிரிவிலையெனிற் பிரிவுண்டோவென்ன
வருளுக்கின்பே யாரவுரைத்தது.

ங. சி. பொருடரப்பிரியு மருடருபவனெனப்
பாங்கிபகரப் பூங்கொடிபுலம்பியது.

சிறுவாளுகிருற்றுமுன்னஞ்சின்னப்படுங்குவளைக்
கெறிவாள்கழித்தனடோழியெழுதிற்கரப்பதற்கே
யறிவாளொழிகுவதஞ்சனமம்பலவற்பணியார்
குறிவாழ்நெறிசெல்வரன்பரென்றம்மகொடியவளே. (ங௩௪)

ஆற்றாமைகூறல்.

ச. பே. பிரிந்தவளாவலால் வரும்பெரும்போதந்
திருமேனிதன்னிற் றிகழுமென்றது.

ச. சி. ஏழை யழுங்கத்
தோழி சொல்லியது.

வானக்கடிமதிற்றில்லையெங்கூத்தனையேத்தலர்போற்
கானக்கடஞ்செல்வர்காதலரென்னக்கதிர்முலைகண்
மானக்கனகந்தருமலர்க்கண்கண்முத்தம்வளர்க்குந்
தேனக்கதார்மன்னனென்னோவினிச்சென்றுதேர்பொருளே. ங௩௫

திணைபெயர்த்துரைத்தல்.

ரு. பே. பெற்றவுயிர்க்குப் பிரிவிலையென்றது.
ரு. சி. துணைவன்பிரியத் துயருறுமனத்தொடு
திணைபெயர்த்திட்டுத் தேமொழிமொழிந்தது.

சுருடருசெஞ்சடைவெண்சுடரம்பலவன்மலயத்
திருடருபூம்பொழிலின்னுயிர்போலக்கலந்திசைத்த
வருடருமின்சொற்களத்தனையும்மறந்தத்தஞ்சென்றே
பொருட்டரக்கிற்கின்றதுவினையேற்குப்புரவலரே. (நநசு)

பொருத்தமறிந்துரைத்தல்.

சு. பே. அருளும்பாராட்ட லன்பேயன்றி
வேறளவளாவலும் வேண்டாமென்றது.
சு. சி. பொருள்வயிற்பிரிவோன் பொருத்தநினைந்து
சுருளுறுகுழலிக்குத் தோழிசொல்லியது.

மூவர்நின்றேத்தமுதலவனுடமுப்பத்துமும்மைத்
தேவர்சென்றேத்துஞ்சிவன்றில்லையம்பலஞ்சீர்வழுத்தாப்
பாவர்சென்றல்குநரகமனையபுனையழற்கான்
போவர்நங்காதலரென்னுமுரைப்பதுபூங்கொடியே. (நநஎ)

பிரிந்தமைகூறல்.

எ. பே. பிரிந்தும்பிரியா போலுயிரன்பை
யருளேசிவத்துக் காரவுரைத்தது.
எ. சி. எதிர்நின்றுபிரியிற் கதிர்நீவர்தெற்
குணர்த்தாதகன்முன் மணித்தேரோனென்றது.

தென்மாத்திசைவசைதீர்தரத்தில்லைச்சிற்றம்பலத்து
ளென்மாத்தலைக்கழல்வைத்தெரியாடுமிறைதிகழும்
பொன்மாப்புரிசைப்பொழிற்றிருப்பூவணமன்னபொன்னே
வன்மாக்களிற்றொடுசென்றனரின்றுநம்மன்னவரே. (நநஅ)

### இரவுறுதுயரத்திற்கிரங்கியுரைத்தல்.

அ. பே. அருளுயிர்ப்பிரிவுகு ணியத்திலுண்டேயென
வின்பக்கதிர்வரை வன்பெடுத்துரைத்தது.

அ. சி. அயிறருகண்ணியைப் பயிறருமிரவினுட்
டாங்குவதரிதெனப் பாங்கிபகர்ந்தது.

ஆழியொன்றீரடியும்மிலன்பாகன்முக்கட்டில்லையோ
னூழியொன்றாதனநான்குமைம்பூதமுமாறுமெங்கு
மேழியன்றாழ்கடலும்மெண்டிசையுந்திரிந்திளைத்து
வாழியன்றேவருக்கன்பெருந்தேர்வந்துவைகுவதே. (௩௩௯)

### இகழ்ச்சிநினைந்தழிதல்.

௯. பே. முன்னும்பிரிவில்லை பின்னும்பிரிவில்லை
யாகிலுமேனியைப் பிரிதலரிதென்றது.

௯. சி. உணர்த்தாது பிரிந்தாரென
மணித்தாழ்குழலி வாடியது.

பிரியாரெனவிகழ்ந்தேன்முன்னம்யான்பின்னையெற்பிரியிற்
றரியாளெனவிகழ்ந்தார்மன்னர்தாந்தக்கன்வேள்விமிக்க
வெரியாரெழிலழிக்கும்மெழிலம்பலத்தோனெவர்க்கு
மரியானருளிலர்போலன்னவென்னையழிவித்ததே. (௩௪0)

### உருவுவெளிப்பட்டுநிற்றல்.

௧0. பே. பிரியுமிடமெலாஞ் சிவமேகண்டது.

௧0. சி. பொருள்வயிற்பிரிந்த வொளியுறுவேலவன்
ஓங்கழற்கடத்துப் பூங்கொடியைநினைந்தது.

சேணுந்திகழ்மதிற்சிற்றம்பலவன்றெண்ணீர்க்கடனஞ்
சூணுந்திருத்துமொருவன்றிருத்துமுலகினெல்லாங்
காணுந்திசைதொறுங்கார்க்கயலுஞ்செங்கனிியொடுபைம்
பூணும்புணர்முலையுங்கொண்டுதோன்றுமொர்பூங்கொடியே. (௩௪௧)

நெஞ்சொடுநோதல்.

கக. பே. செல்லிடமெங்குஞ் சிவமெனவுணர்தல்.

கக. சி. வல்லழற்கடத்து மெல்லியலைநினைந்து
வெஞ்சுடர்வேலோ னெஞ்சொடுநொந்தது.

பொன்னணியீட்டியவோட் டருநெஞ்சமிப்பொங்குவெங்கா
னின்னணிநிற்குமிதென்னெனபதேயிமையோரிறைஞ்சு
மன்னணிதில்லைவளநகரன்னவன்னநடையாண்
மின்னணிநுண்ணிடைக்கோபொருட்கோநீவிரைகின்றதே. (ருசஉ)

நெஞ்சொடுபுலத்தல்.

கஉ. பே. போதந்தனையிழந் தருளேபூண்டது.

கஉ. சி. அழற்கடத் தழுக்கமிக்கு
நிழற்கதிர்வேலோ னீடுவாடியது.

நாய்வயினுள்ளகுணமுமில்லேனைநற்றொண்டுகொண்ட
தீவயின்மேனியன்சிற்றம்பலமன்னசின்மொழியைப்
பேய்வயினும்மரிதாகும்பிரிவெளிதாக்குவித்துச்
சேய்வயிற்போந்தநெஞ்சேயஞ்சத்தக்கதுன்சிக்கனவே. (ருசரு)

நெஞ்சொடுமெறுத்தல்.

கரு. பே. இன்பன்றிவேறு பிரிவரலிலையென்
றன்பாய்ப்போத மருளேயாயது.

கரு. சி. நீணெறிசென்ற நாறிணர்த்தாரோன்
சேணெறியஞ்சி மீணெறிசென்றது.

தீமேவியநிருத்தன்றிருச்சிற்றம்பலமனைய
பூமேவியபொன்னைவிட்டுப்பொன்றேடியிப்பொங்குவெங்கா
னுமேநடக்கவொழிந்தனம்யாநெஞ்சம்வஞ்சியன்ன
வாமேகலையைவிட்டோபொருடேர்ந்தெம்மைவாழ்விப்பதே. (ருசச)

## நாளெண்ணிவருந்தல்.

கச. பே. அருளேபிரிவி னளவாராய்ந்தது.

கச. சி. சென்றவர்திறத்து நின்றுநனிவாடுஞ்
சூழிருங்கூந்தற்குத் தோழிநனிவாடியது.

தெண்ணீரணிசிவன்சிற்றம்பலஞ்சிந்தியாதவரிற்
பண்ணீர்மொழியிவளைப்பையுளெய்தப்பனித்தடங்க
ணுண்ணீருகவொளிவாடிடநீடுசென்றூர்சென்றநா
ளெண்ணீர்மையினிலனுங்குழியும்விரலிட்டறவே. (௩சரு)

## ஏறுவரவுகண்டிரங்கியுரைத்தல்.

கரு. பே. அருளுயிர்ப்பருவங்கண் டன்பாயுரைத்தது.

கரு. சி. நீடியபொன்னி னெஞ்சநெகிழ்ந்து
வாடியவன் வரவுற்றது.

சுற்றம்பலமின்மைகாட்டித்தன்றூல்கழறந்ததொல்லோன்
சிற்றம்பலமனையாள்பரமன்றுதிண்கோட்டின்வண்ணப்
புற்றங்குதர்ந்துநன்ஞுகொடும்பொன்ஞூர்மணிபுலம்பக்
கொற்றமருவுகொல்லேறுசெல்லாநின்றகூர்ஞ்செக்கரே. (௩சசு)

## பருவங்கண்டிரங்கல்.

கசு. பே. இன்பந்தனக்கிது பருவமென்றே
யன்பாயுயிர்மிகு மருளாலுரைத்தது.

கசு. சி. மன்னியபருவ முன்னியசெலவின்
இன்னலெய்தி மன்னனேகியது.

கண்ணுழையாதுவிண்மேகங்கலந்துகணமயிறூக்
கெண்ணுழையாத்தழைகோலிநின்றூலுமினமலர்வாய்
மண்ணுழையாவுமறிதில்லைமன்னனதின்னருள்போற்
பண்ணுழையாமொழியாளென்னளாங்கொன்மன்பாவியற்கே. (௩சஎ)

### முகிலொடுகூறல்.

கஎ. பே. போதத்துக்குமுன் பன்பின்பமுற்றது.

கஎ. சி. எனைப்பலதுயரமோ டேகாநின்றவன்
துணைக்காரதற்குத் துணிந்துசொல்லியது.

அற்படுகோட்டினின்றுடிசிற்றம்பலத்தான்மிடற்றின்
முற்படுநீண்முகிலென்னின்முன்னேன்முதுவோர்குழுமி
விற்படுவாணுதலாள்செல்லறீர்ப்பான்விரைமலர்தூய்
நெற்படுவான்பலிசெய்தயராநிற்குநீணகர்க்கே. (௩சஅ)

### தேர்வரவுகூறல்.

கஅ. பே. அருளுயிரன்பி னமர்ந்துவருத
லின்ப்ந்தனக்கு முன்னியம்பியது.

கஅ. சி. வேந்தன்பொருளொடு விரும்பிவருமென
ஏந்திழைப்பாங்கி யினிதியம்பியது.

பாவியைவெல்லும்பரிசில்லையேமுகில்பாவையஞ்சீ
ராவியைவெல்லக்கறுக்கின்றபோழ்தத்தினம்பலத்துக்
காவியைவெல்லுமிடற்றோனருளிற்கதுமெனப்போய்
மேவியமாநிதியோடன்பர்தேர்வந்துமேவினதே. (௩சகூ)

### இளையரெதிர்கோடல்.

ககூ. பே. சிவப்பெருங்கருணையா லுவப்பின்பாமுயி
ரருட்பெருவளத்தொடு மன்பின்பானது.

ககூ. சி. செறிகழலவன் றிருநகர்புகுதர
எறிவேலிளைஞ ரெதிர்கொண்டது.

யாழின்மொழிமங்கைபங்கன்சிற்றம்பலத்தானமைத்த
வூழின்வலியதொன்றென்னையொளிமேகலையுகளும்
வீழும்வரிவளைமெல்லியலாவிசெல்லாதமுன்னே
சூழுந்தொகுநிதியோடன்பர்தேர்வந்துதோன்றியதே. (௩ருо)

### உண்மகிழ்ந்துரைத்தல்.

உ0. பே. அறிவும்போகமும் பிரிவிலையென்று
நெஞ்சிடையின்பாய் நிறைந்ததென்றது.

உ0. சி. பெருநிதியோடு திருமனைபுகுந்தவன்
வளமனைக்கிழத்தியோ டுளமகிழ்ந்துரைத்தது.

மயின்மன்னுசாயலிம்மானைப்பிரிந்துபொருள்வளர்ப்பான்
வெயின்மன்னுவெஞ்சுரஞ்சென்றதெல்லாம்விடையோன்புலியூர்க்
குயின்மன்னுசொல்லிமென்கொங்கையென்னங்கத்திடைக்குளிப்பத்
துயின்மன்னுபூவணைமேலணையாமுன்றுவளுற்றதே. (ரு௫க)

---

## உரு. பரத்தையிற்பிரிவு.

பரத்தையிற் பிரிவாவது அறிவு பூரண மாகியின்பாதல். அது நாற்பத்தொன்பது துறையுடைத்து. அவை வருமாறு:—

கண்டவர்கூறல் காதற்றோழி
பொறையுவந்துரைத்தல் பொதுப்படக்கூறி
வாடியழுங்கன் மாறுகொண்டவனொடு
கனவிழந்துரைத்தல் விளக்கொடுவெறுத்தல்
வாரம்பகர்ந்து வாயின்மறுத்தல்
பள்ளியிடத்தூடல் பணிமொழியாடன்
செவ்வணிவிடுக்க வில்லோர்கூற
லயலறிவுரைத்தவ ளழுக்கமெய்தல்
செவ்வணிகண்ட வாயிலவர்கூறன்
மனைபுகல்கண்ட வாயிலவர்கூறன்
முகமலர்ச்சிகூறன் முனிவதென்னெனக்
காலநிகழ்வுரைத்தல் கலவியெய்தலை
யெடுத்துரைத்தல்லொடு கலவிகருதிப்
புலத்தல்குறிப்பறிந்து புலந்தமைகூறல்

வாயிலவர்வாழ்த்தல் புனல்வரவுரைத்த
றேர்கண்டுமகிழ்தல் சேடியர்விழவிற்
றம்முளுரைத்த றன்னைவியத்த்
னகைத்துரைத்தல்லொடு நாண்கண்டுரைத்தல்
பாணன்வரவுரைத்தல் பாங்கியியற்பழித்த
லுழையரியற்பழித்த லொண்ணுதலாளவற்
கியற்படமொழித லியல்புனைந்துரைத்தல்
வாயில்பெறுது மகன்றிறங்னைதல்
வாயிற்கணின்று தோழிக்குரைத்தல்
வாயில்வேண்டத் தோழிகூறன்
மன்னியதோழி வாயில்வேண்டன்
மனையவர்மகிழ்தல் வாயின்மறுத்தல்
பாணனொடுவெகுடல் பாணன்புலத்தல்
விருந்தொடுசெல்லத் துணிந்தமைகூற
லூடறணிவித்த லணைந்தவழியூடல்
புனலாட்டுவித்தமை கூறிப்புலத்தல்
கலவிகருதிப் புலவிபுகறன்
மிகுத்துரைத்தூடல் விறல்வேற்காளை
யூடனீட வாடியுரைத்த
றுனியொழிந்துரைத்த றுகளொன்றில்லாப்
புதல்வன்மேல்வைத்துப் புலவிதீர்தல்
கலவியிடத்தூடன் முன்னிகழ்வுரைத்தல்
பரத்தையைக்கண்டமை பயன்படக்கூற
லாதியமெடுத்துரைத் தூடறீர்த்த
லெண்ணொன்றிவை பரத்தையிற்பிரிவெனப்
பண்ணார்மொழியாய் பகர்ந்திசினோரே.

## கண்டவர்கூறல்.

க. பே. பத்தியிடத்தும் விதியுண்டோ
வென்றுதம்மடியா ருள்ளேநினைந்தது.

க. சி. உரத்தகுவேலோன் பரத்தையிற்பிரியத்
திண்டேர்வீதியிற் கண்டோருரைத்தது.

உடுத்தணிவாளரவன்றில்லையூரன்வரவொருங்கே
யெடுத்தணிகையேறினவளையார்ப்பவிளமயிலேர்
கடுத்தணிகாமர்கரும்புருவச்சிலைகண்மலரம்
படுத்தணிவாளிளையோர்சுற்றும்பற்றினர்மாதிரமே. (ருருஉ)

## பொறையுவந்துரைத்தல்.

உ. பே. அருளேசிவப்பொறை யறிந்துரைத்தது.

உ. சி. கள்ளவிழ்கோதையைக் காதற்றோழி
உள்ளவிழ்பொறைகண் டுவந்துரைத்தது.

சுரும்புறுகொன்றையன்றொல்புலியூர்ச்சுருங்குமருங்குற்
பெரும்பொறையாட்டியையென்னின்றுபேசுவபேரொலிநீர்க்
கரும்புறையூரன்கலந்தகன்றானென்றுகண்மணியு
மரும்பொறையாகுமென்னுவியுந்தேய்வுற்றழிகின்றதே. (ருருரு)

## பொதுப்படக்கூறிவாடியழுங்கல்.

ரு. பே. இன்பமுயிர்விதி யெண்ணியிரங்கியது.

ரு. சி. பொற்றிகழரவன் மற்றிகழ்தில்லைப்
பிரிந்தவூரனோ டிருந்துவாடியது.

அப்புற்றசென்னியன்றில்லையுறுரினவருறுநோ
யொப்புற்றெழினலமூரன்கவரவுள்ளும்புறம்பும்
வெப்புற்றுவெய்துயிர்ப்புற்றுத்தம்மெல்லணையேதுணையாச்
செப்புற்றகொங்கையர்யாவர்கொலாருயிர்தேய்பவரே. (ருருச)

## கனவிழந்துரைத்தல்.

ச. பே. மறந்துமுயிரின் பகலாதென்றது.
ச. சி. சினவிற்றடக்கைத் தீம்புனலூரனைக்
கனவிற்கண்ட காரிகையுரைத்தது.

தேவாசுரரிறைஞ்சுங்கழலோன்றில்லைசேரலர்போ
லாவாகனவுமிழந்தேனனவென்றமளியின்மேற்
பூவாரகலம்வந்தூரன்றரப்புலம்பாய்நலம்பாய்
பாவாய்தழுவிற்றிலேன்விழித்தேனரும்பாவியனே. (நடுரு)

## விளக்கொடுவெறுத்தல்.

ரு. பே. இன்பஞ்சுடரோ டிரங்கியுரைத்தது.
ரு. சி. பஞ்சணைத்துயின்ற பஞ்சின்மெல்லடி
அன்பனோடமுங்கிச் செஞ்சுடர்க்குரைத்தது.

செம்முகநீலமலர் தில்லைச்சிற்றம்பலத்தரற்குக்
கைம்முகங்கூம்பக்கழல்பணியாரிற்கலந்தவர்க்குப்
பொய்ம்முகங்காட்டிக்கரத்தல்பொருத்தமன்றென்றிலையே
நெய்ம்முகமாந்தியிருண்முகங்கீழுநெடுஞ்சுடரே. (நடுசு)

## வாரம்பகர்ந்துவாயின்மறுத்துரைத்தல்.

சு. பே. இன்புயிரன்பே யெடுத்துரைத்தது.
சு. சி. வார்புனலூர னேர்திகழ்தோள்வயிற்
கார்புரைகுழலி வாரம்பகர்ந்தது.

பூங்குவளைப்பொலிமாலையுமூரன்பொற்றோளிணையு
மாங்குவளைத்துவைத்தாரேனுங்கொள்கநள்ளாரரணந்
தீங்குவளைத்தவில்லோன்றில்லைச்சிற்றம்பலத்தயல்வா
யோங்குவளைக்கரத்தார்க்கடுத்தோமன்னுமுருவரையே. (நடுஎ)

பள்ளியிடத்தூடல்.

எ. பே. இன்பமிகழ்த லன்பெனக்கண்டது.

எ. சி. பீடிவர்கற்பிற் ஞேடிவர்கோதை
ஆடவன்றன்ஞே டேியுரைத்தது.

தவஞ்செய்திலாதவெந்தீவினையேம்புன்மைத்தன்மைக்கெள்ளா
தெவஞ்செய்துநின்றினியின்றுனைநோவதெனத்தன்முத்தன்
சிவன்செய்தசீரருளார்தில்லையூரநின்சேயிழையார்
நவஞ்செய்தபுல்லங்கண்மாட்டேந்தொடல்விடுநெற்கலையே. (ருருஅ)

செவ்வணிவிடுக்கவில்லோர்கூறல்.

அ. பே. பலபாராட்டிலு மின்பகலாதென
வடியார்தாமே யறிந்துகூறியது.

அ. சி. பாற்செலுமொழியார் மேற்செலவிரும்பல்
பொல்லாதென்ன வில்லோர்புகன்றது.

தணியுறப்பொங்குமிக்கொங்கைகடாங்கித்தளர்மருங்குல்
பிணியுறப்பேதைசென்றின்றெய்துமாலரவும்பிறையு
மணியுறக்கொண்டவன்றில்லைத்தொல்லாயநல்லார்கண்முன்னே
பணியுறத்தோன்றுநுடங்கிடையார்கள்பயின்மனைக்கே. (ருருகூ)

அயலறிவுரைத்தவளழுக்கமெய்தல்.

கூ. பே. பலர்கண்டாலுமின் பகலாதென்றது.

கூ. சி. உலகியலறியச் செலவிடலுற்ற
விழுத்தகைமாதர்க் கழுக்கஞ்சென்றது.

இரவணையும்மதியேர்நுதலார்நுதிக்கோலஞ்செய்து
குரவணையுங்குழலிங்கிவளாலிக்குறியறிவித்
தரவணையுஞ்சடையோன்றில்லையூரனையாங்கொருத்தி
தரவணையும்பரிசாயினவாறுநந்தன்மைகளே. (ருகூ0)

செவ்வணிகண்டவாயிலவர்கூறல்.

கO. பே. இன்பங்கண்டவர்க் கெங்குமின்பாகல்.

கO. சி. மணிக்குழைபூப்பிய லுணர்த்தவந்த
ஆயிழையைக்கண்ட வாயிலவருரைத்தது.

சிவந்தபொன்மேனிமணிதிருச்சிற்றம்பலமுடையான்
சிவந்தவந்தாளணியூரற்குலகியலாறுரைப்பான்
சிவந்தபைம்போதுமஞ்செம்மலர்ப்பட்டுங்கட்டார்முலைமேற்
சிவந்தவஞ்சாந்தமுந்தோன்றினவந்துதிருமனைக்கே. (ரு௬க)

மனைபுகல்கண்டவாயிலவர்கூறல்.

கக. பே. இன்புடையோர்க்குப் புகலின்பேயென்
றன்புடையோர்க ளறியவுரைத்தது.

கக. சி. கடனறிந்தூரன் கடிமனைபுகுதர
வாய்ந்தவாயிலவ ராய்ந்துரைத்தது.

குராப்பயில்கூழையிவளின்மிக்கம்பலத்தான்குழையா
மராப்பயினுண்ணிடையாரடங்காரெவரேயினிப்பண்
டிராப்பகனின்றுணங்கீர்ங்கடையித்துணைப்போழ்திற்சென்று
நராப்பயில்பூம்புனலூரன்புகுமிக்கடிமனைக்கே. (ரு௬உ)

முகமலர்ச்சிகூறல்.

கஉ. பே. உயிரின்படைந்த தடியார்தேறியது.

கஉ. சி. பூம்புனலூரன் புகமுகமலர்ந்த
தேம்புனைகோதை திறம்பிறருரைத்தது.

வந்தான்வயலணியூரனெனச்சினவாண்மலர்க்கண்
செந்தாமரைச்செவ்விசென்றசிற்றம்பலவன்னருளான்
முந்தாயினவியனோக்கெதிர்நோக்கமுகமதிவிற்
பைந்தாட்குவளைகள்பூத்திருள்சூழ்ந்துபயின்றனவே. (ரு௬ரு)

காலநிகழ்வுரைத்தல்.

கங. பே. இன்புடையோர்க்குக் கருணையெளிதென
அன்புடையோர்க ளறியவுரைத்தது.
கங. சி. இகழ்வதெவன்கொ னிகழ்வதிவ்வாறெனச்
செழுமலர்க்கோதை யுழையருரைத்தது.

வில்லிகைப்போதின்விரும்பாவரும்பாவியர்களன்பிற்
செல்லிகைப்போதினெரியுடையோன்றில்லையம்பலஞ்சூழ்
மல்லிகைப்போதின்வெண்சங்கம்வண்டேவிண்டோய்பிறையோ
டெல்லிகைப்போதியல்வேல்வயலூரற்கெதிர்கொண்டதே. (நகூச)

எய்தலெடுத்துரைத்தல்.

கச. பே. இன்பம்பெற்றவுயி ரன்பாய்மகிழ்ந்தது.
கச. சி. சீரியலுலகிற் றிகழ்தரக்கூடி
வார்புனலூரன் மகிழ்வுற்றது.

புலவித்திரைபொரச்சீறடிப்பூங்கலஞ்சென்னியுய்ப்பக்
கலவிக்கடலுட்கலிங்கஞ்சென்றெய்திக்கதிர்கொண்முத்த
நிலவிநிறைமதுவார்ந்தம்பலத்துநின்றோனருள்போன்
றுலவியலாத்தனஞ்சென்றெய்தலாயினவூரனுக்கே. (நகூரு)

கலவிகருதிப்புலத்தல்.

கரு. பே. இன்பமிகும்படி யன்பறிவித்தது.
கரு. சி. மன்னியவுலகிற் றுன்னியவன்பொடு
கலவிகருதிப் புலவியெய்தியது.

செவ்வாய்துடிப்பக்கருங்கண்பிறழச்சிற்றம்பலத்தெம்
மொய்வார்சடையோனருளின்முயங்கிமயங்குகின்றாள்
வெவ்வாயுயிர்ப்பொடுவிம்மிக்கலுழ்ந்துபுலந்துநைந்தா
ளிவ்வாறருள்பிறர்க்காகுமெனநினைந்தின்னகையே. (நகூகூ)

குறிப்பறிந்துபுலந்தமைகூறல்.

கசு. பே. அன்பாலின்பென் ருராய்ந்துரைத்தது.

கசு. சி. குறிப்பினிற்குறிப்பு நெறிப்படநோக்கி
மலர்நெடுங்கண்ணி புலவியுற்றது.

மல்லைப்பொருவடிமானுந்தமியண்மன்னன்னொருவன்
பலரைப்பொருதென்றிழிந்துநின்றுள்பள்ளிகாமனெய்த
வல்லைப்பொருதன்றழல்விழித்தோனம்பலம்வணங்காக்
கலரைப்பொருச்சிறியாளென்னைகொல்லோகருதியதே. (ருசுஎ)

வாயிலவர்வாழ்த்தல்.

கஎ. பே. அடியாருயிரின் பகமிகமகிழ்ந்தது.

கஎ. சி. தலைமகனது தகவுடைமை
நிலைதகுவாயி னின்றோருரைத்தது.

வில்லைப்பொலிநுதல்வேற்பொலிகண்ணிமெலிவறிந்து
வல்லைப்பொலிவொடுவந்தமையானின்றுவான்வழுத்துந்
தில்லைப்பொலிசிவன்சிற்றம்பலஞ்சிந்தைசெய்பவரின்
மல்லைப்பொலிவயலூரன்மெய்யேதக்கவாய்மையனே. (ருசுஅ)

புனல்வரவுரைத்தல்.

கஅ. பே. அடியாருயிர்க்கின் பாமெங்குமென்றது.

கஅ. சி. புனலாடுகவென்பப் புனைந்துகொண்டு
மனைபுகுந்தவனை வையமுரைத்தது.

சூன்முதிர் துள்ளுநடைப்பெடைக்கிற்றுணைச்சேவல்செய்வான்
றேன்முதிர்வேழத்தின்மென்பூக்குதர்செம்மலூரன்றிண்டோண்
மான்முதிர்நோக்கினல்லார்மகிழத்தில்லையானருளே
போன்முதிர்பொய்கையிற்பாய்ந்ததுவாய்ந்தபுதுப்புனலே. (ருசுகூ)

தேர்வரவுகண்டுமகிழ்ந்துகூறல்.

ககூ. பே. இன்புடையோரா லெவர்க்குமின்பாமென
வடியார்நோக்கி யகமிகமகிழ்ந்தது.

ககூ. சி. பயின்மணித்தேர்செலப் பரத்தையர்சேரிக்
கயன்மணிக்கண்ணியர் கட்டுரைத்தது.

சேயேயெனமன்னுதீம்புனலூரன்றிண்டோளிணைக
டோயிர்புணர்தவந்தொன்மைசெய்தீர்சுடர்கின்றகோலந்
தீயேயெனமன்னுசிற்றம்பலவர்தில்லைந்நகர்வாய்
வீயேயெனவடியீர்நெடுந்தேர்வந்துமேவினதே. (௩எ0)

புனல்விளையாட்டிற்றம்முளுரைத்தல்.

உ0. பே. உலகிலெப்பணிக ளுற்றுமுயிருக்
கின்பம்பிரிவில யென்றேயுரைத்தது.

உ0. சி. தீம்புனல்வாயிற் சேயிழைவருமெனக்
காம்பனதோளியர் கலந்துகட்டுரைத்தது.

அரமங்கையரெனவந்துவிழாப்புகுமவ்வவர்வா
னரமங்கையரெனவந்தணுகும்மவளன்றுகிராற்
சிரமங்கையனைச்செற்றோன்றில்லைச்சிற்றம்பலம்வழுத்தாப்
புரமங்கையரினையாதையகாத்துநம்பொற்பரையே. (௩எக)

தன்னைவியந்துரைத்தல்.

உக. பே. செய்பணியெல்லாஞ் சிவனின்பென்றது.

உக. சி. அரத்தத்துவர்வாய்ப் பரத்தைத்தலைவி
முனிவுதோன்ற நணிபுகன்றது.

கனலூர்கணைதுணையூர்கெடச்செற்றசிற்றம்பலத்தெம்
மனலூர்சடையோனருள்பெற்றவரினமரப்புல்லு
மினலூர்நகையவர்தம்பாலருள்விலக்காவிடின்யான்
புனலூரனைப்பிரியும்புனலூர்கணப்பூங்கொடியே. (௩எஉ)

## நகைத்துரைத்தல்.

உஉ. பே. இன்பமேபணிகண் டன்பாய்க்கொண்டது.

உஉ. சி. வேந்தன்பிரிய வேந்திழைமடந்தை
பரத்தையைநோக்கி விரித்துரைத்தது.

இறுமாப்பொழியுமென்றேதங்கைதோன்றினென்னெங்கையங்கைச்
சிறுமான்றரித்தசிற்றம்பலத்தான்றில்லையூரன்றிண்டோள்
பெறுமாத்தொடுந்தன்னபேரணுக்குப்பெற்றபெற்றியினே
டிறுமாப்பொழியவிறுமாப்பொழிந்தவிணைமுலையே. (ங௭ங)

## நாணுதல்கண்டுமிகுத்துரைத்தல்.

உங. பே. அருளுயிரன்புக்குக் கண்டுவந்தது.

உங. சி. மன்னவன்பிரிய நன்மனைக்கிழத்தியை
நாணுதல்கண்ட வாணுதலுரைத்தது.

வேயாதுசெப்பினடைத்துத்தமிவைகும்வீயினன்ன
தீயாடிசிற்றம்பலமனையாடில்லையூரனுக்கின்
றேயாப்பழியெனநாணியென்கண்ணிங்ஙனேமறைத்தா
ளாயாமியல்பிவள்கற்புநற்பாலவியல்புகளே. (ங௭ச)

## பாணன்வரவுரைத்தல்.

உச. பே. அருளுயிர்ப்பாராட் டன்பென்றியம்பியது.

உச. சி. இகல்வேலவனகல் வறியாப்பாணனைப்
பூங்குழன்மாதர்க்குப் பாங்கிபகர்ந்தது.

விறலியும்பாணனும்வேந்தற்குத்தில்லையிறையமைத்த
திறலியல்யாழ்கொண்டுவந்துநின்றார்சென்றிராத்திசைபோம்
பறலியல்வாவல்பகலுறைமாமரம்போலுமன்றே
வறலியல்கூழைநல்லாய்தமியோமையறிந்திலரே. (ங௭ரு)

## தோழியியற்பழித்தல்.

உரு. பே. அருளின்பக்கனி வறியவலருரைத்தது.

உரு. சி. தலைமகனைத் தகவிலனெனச்
சிலைநுதற்பாங்கி தீங்குசெப்பியது.

திக்கினிலங்குதிண்டோளிறைதில்லைச்சிற்றம்பலத்துக்
கொக்கினிறகதணிந்துநின்றாடிதென்கூடலன்ன
வக்கின்னகையிவணையவயல்வயினல்குதலாற்
றக்கின்றிருந்திலனின்றசெவ்வேலெந்தனிவள்ளலே. (௩எசு)

## உழையரியற்பழித்தல்.

உசு. பே. அடியாருயிரின் பறியமாறு
யுரைத்ததுபின்னு மெடுத்தெடுத்தியம்பல்.

உசு. சி. அரத்தவேலண்ணல் பரத்தையிற்பிரியக்
குழைமுகத்தவளுக் குழையருரைத்தது.

அன்புடைநெஞ்சத்திவள்பேதுறவம்பலத்தடியா
ரென்பிடைவந்தமிழ்தூறநின்றாடியிருஞ்சுழியற்
றன்பெடைநையத்தகவழிந்தன்னஞ்சலஞ்சலத்தின்
வன்பெடைமேற்றுயிலும்வயலூரன்வரம்பிலனே. (௩எஎ)

## இயற்படமொழிதல்.

உஎ. பே. அடியார்க்குச்சிவ னுயிரன்புரைத்தது.

உஎ. சி. வரிசிலையூரன் பரிசுபழித்த
உழையர்கேட்ப வெழினகையுரைத்தது.

அஞ்சார்புரஞ்செற்றசிற்றம்பலவரந்தண்கயிலை
மஞ்சார்புனத்தன்றுமாந்தழையேந்திவந்தாரவரென்
னெஞ்சார்விலக்கினுநீங்கார்நனவுகனவுமுண்டேற்
பஞ்சாரமளிப்பிரிதலுண்டோவெம்பயோதரமே. (௩எஅ)

நினைந்துவியந்துரைத்தல்.

உஅ. பே. பலப்ணிசெய்யினும் பரனின்பன்றி
வேறிலையெனவுயிர் வியந்துரைத்தது.

உஅ. சி. மெல்லியற்பரத்தையை விரும்பிமேவினேன்
அல்லியங்கோதையை யகனமர்ந்துரைத்தது.

தெள்ளம்புனற்கங்கைதங்குஞ்சடையன்சிற்றம்பலத்தான்
கள்ளம்புகுநெஞ்சர்காணுவிறையுறைகாழியன்ன
ளுள்ளம்புகுமொருகாற்பிரியாதுள்ளியுள்ளுதொறும்
பள்ளம்புகும்புனல்போன்றகத்தேவரும்பான்மையளே. (௩எக)

வாயில்பெறாதுமகன்றிறநினைதல்.

உகூ. பே. இன்புமடியார் கூட்டமென்றே
யன்பாயுயிரே யகமிரங்கியது.

உகூ. சி. பொற்றொடிமாதர் நற்கடைகுறுகி
நீடியவாயிலின் வாடினன்மொழிந்தது.

தேன்வண்டுறைதருகொன்றையன்சிற்றம்பலம்வழுத்தும்
வான்வண்டுறைதருவாய்மையன்மன்னுகுதலையின்வா
யான்வண்டுறைதருமாலமுதன்னவன்வந்தணையா
னுன்வண்டுறைதருகொங்கையெவ்வாறுகொணண்ணுவதே. (௩அ0)

வாயிற்கணின்றுதோழிக்குரைத்தல்.

௩0. பே. எப்பணிசெயினுமரு ளின்றியன்பிலையென
வுயிரேயருளுக் குவந்துரைத்தது.

௩0. சி. பெருந்தகைவாயில் பெறாதுநின்
றருந்தகைப்பாங்கிக் கறியவுரைத்தது.

கயல்வந்தகண்ணியர்கண்ணிணையான்மிகுகாதரத்தான்
மயல்வந்தவாட்டமகற்றாவிரதமென்மாமதியி
னயல்வந்தவாடரவாடவைத்தோனம்பலநிலவு
புயல்வந்தமாமதிற்றில்லைநன்னாட்டுப்பொலிபவரே. (௩அக)

## வாயில்வேண்டத்தோழிகூறல்.

ருக. பே. எப்பணியுஞ்சிவ னன்றியிலையென
வருளேசிவனுக் கறியவுரைத்தது.

ருக. சி. வைவேலண்ணல் வாயில்வேண்டப்
பையரவல்குற் பாங்கிபகர்ந்தது.

கூற்றுயினசினவாளியெண்ணீர்கண்கள்கோளிழித்தாற்
போற்றுன்செறியிருட்பொக்கமெண்ணீர்கன்றகன்றபுனிற்
றீற்றுவெனநீர்வருவதுபண்டின்றெம்மீசர்தில்லைத்
தேற்றூர்கொடிநெடுவீதியிற்போகிரத்தேர்மிசையே. (ருஅஉ)

## தோழிவாயில்வேண்டல்.

ருஉ. பே. அருளேசிவத்துக் குயிரின்பாகி
யென்றுவந்தருளே சிவத்துக்குரைத்தது.

ருஉ. சி. வாயில்பெறுது மன்னவனிற்ப
ஆயிழையவட்குத் தோழிசொல்லியது.

வியந்தலைநீர்வையமெய்யேயிறைஞ்சவிண்டோய்குடைக்கீழ்
வயந்தலைகூர்ந்தொன்றும்வாய்திறவார்வந்தவாளரக்கன்
புயந்தலைதீரப்புலியூரரனிருக்கும்பொருப்பிற்
கயந்தலையானைகடிந்தவிருந்தினர்கார்மயிலே. (ருஅரு)

## மனையவர்மகிழ்தல்.

ருரு. பே. அடியாருயிரின் பண்புகண்டது.

ருரு. சி. கன்னிமானேக்கி கனன்றுநோக்க
மன்னியமனையவர் மகிழ்ந்துரைத்தது.

தேவியங்கண்டிகழ்மேனியன்சிற்றம்பலத்தெழுது
மோவியங்கண்டன்னவொண்ணுதலாடனக்கோகையுய்ப்பான்
மேவியங்கண்டனேயோவந்தனனெனவெய்துயிர்த்துக்
காவியங்கண்கழுநீர்ச்செவ்விவெளவுதல்கற்றனவே. (ருஅச)

## வாயின்மறுத்துரைத்தல்.

நடச. பே. சிவமருளுேக்கி யருட்செய்கையுரைத்தது.

நடச. சி. மடவரற்றேழி வாயில்வேண்ட
அடல்வேலவ னாருளுரைத்தது.

உடைமணிகட்டிச்சிறுதேருருட்டியுலாத்தருமிந்
நடைமணியைத்தந்தபின்னர்முன்னான்முகன்மாலறியா
விடைமணிகண்டர்வண்டில்லைமென்றேகையன்னார்கண்முன்னங்
கடைமணிவாணகையாயின்றுகண்டனர்காதலரே. (நஅரு)

## பாணனொடுவெகுளுதல்.

நரு. பே. பரசமயத்திற் பரிவாகாதென்
றின்பேயுயிருக் கெடுத்துரைத்தது.

நரு. சி. மன்னியாழ்ப்பாணன் வாயில்வேண்ட
மின்னிடைமடந்தை வெகுண்டுரைத்தது.

மைகொண்டகண்டர்வயல்கொண்டதில்லைமல்கூரர்நின்வாய்
மெய்கொண்டவன்பினரென்பதென்விள்ளாவருள்பெரியர்
வைகொண்டவூசிகொற்சேரியின்விற்றெம்மில்வண்ணவண்ணப்
பொய்கொண்டுநிற்கலுற்றேபுலையாத்தின்னிபோந்ததுவே. (நஅசு)

## பாணன்புலந்துரைத்தல்.

நசு. பே. பரசமயங்கள் பாறியெய்த்தது.

நசு. சி. கருமலர்க்கண்ணி கனன்றுகட்டுரைப்பப்
புரியாழ்ப்பாணன் புறப்பட்டது.

கொல்லாண்டிலங்குமழுப்படையோன்குளிர்தில்லையன்னாய்
வில்லாண்டிலங்குபுருவநெரியச்செவ்வாய்துடிப்பக்
கல்லாண்டெடேல்கருங்கண்சிவப்பாற்றுகறுப்பதன்று
பல்லாண்டடியேனடிவலங்கொள்வன்பணிமொழியே. (நஅஎ)

விருந்தொடுசெல்லத் துணிந்தமைகூறல்.

௩எ. பே. உண்மைப்பணிகண் டடியாருவந்தது.

௩எ. சி. பல்வளை பரிசுகண்
டில்லோ ரியம்பியது.

மத்தக்கரியுரியோன்றில்லையூரன்வரவெனலுந்
தத்தைக்கிளவிமுகத்தாமரைத்தழல்வேன்மிளிர்ந்து
முத்தம்பயக்குங்கழுநீர்விருந்தொடென்றுதமுன்னங்
கித்தக்கருங்குவளைச்செவ்வியோடிக்கெழுமினவே. (௩அஅ)

ஊடறணிவித்தல்.

௩அ. பே. அருளேயன்புகண் டரற்கெடுத்துரைத்தது.

௩அ. சி. தோன்றலைத்துணையொடு தோழிகண்டு
வான்றகைமடந்தையை வருத்தந்தணித்தது.

கவலங்கொள்பேய்த்தொகைபாய்தரக்காட்டிடையாட்டுவந்த
தவலங்கிலாச்சிவன்றில்லையன்னாய்தழுவிம்முழுவிச்
சுவலங்கிருந்தநந்தோன்றற்றுணையெனத்தோன்றுதலா
லவலங்களைந்துபணிசெயற்பாலையரசனுக்கே. (௩அகூ)

அணைந்தவழியூடல்.

௩கூ. பே. இன்பம்பணிமுழு தன்பாக்கொண்டு
பின்பும்புதிதா யன்புபேணியது.

௩கூ. சி. தெளிபுனலூரன் சென்றணைந்தவழி
ஒளிமதிநுதலி யூடியுரைத்தது.

சேருன்றிகழ்வயற்சிற்றம்பலவர்தில்லைநகர்வாய்
வேருன்றிகழ்கண்ணிளையார்வெகுள்வர்மெய்ப்பாலன்செய்த
பாருன்றிகழும்பரிசினமேவும்படிறுவவேங்
காருன்றொடுறொடரேல்விடுநீண்டலெங்கைத்தலமே. (௩கூ0)

## புனலாட்டுவித்தமைகூறிப்புலத்தல்.

சo. பே. உண்மைப்பணியு முண்டோவின்பஞ்
செம்மையாய்விடிலெனச் சிவமேயுரைத்தது.

சo. சி. ஆங்கதனுக் கழுக்கமெய்தி
வீங்குமென்முலை விட்டுரைத்தது.

செந்தார்நறுங்கொன்றைச்சிற்றம்பலவர்தில்லைநகரோர்
பந்தார்விரலியைப்பாய்புனலாட்டிமன்பாவியெற்கு
வந்தார்பரிசுமன்றுய்நிற்குமாறென்வளமனையிற்
கொந்தார்தடங்தோள்விடங்காலயிற்படைக்கொற்றவரே. (ருசுக)

## கலவிகருதிப்புலத்தல்.

சக. பே. ஆனந்தத்துக் கன்புபிறிதிலை
யென்றுசிவமே யெடுத்துரைத்தது.

சக. சி. கலைவளரல்கு றலைமகன்றன்னெடு
கலவிகருதிப் புலவிபுகன்றது.

மின்றுன்னியசெஞ்சடைவெண்மதியன்விதியுடையோர்
சென்றுன்னியகழற்சிற்றம்பலவன்றென்னம்பொதியி
னன்றுஞ்சிறியவரில்லெமதில்லநல்லூரமன்னே
யின்றுன்றிருவருளித்துணைசாலுமன்னெங்களுக்கே. (ருசுஉ)

## மிகுத்துரைத்தூடல்.

சஉ. பே. பெற்றிடின்ஞான முதன்மூன்றிலையெனல்.

சஉ. சி. நாடுமூரு மில்லுஞ்சுட்டி
ஆடற்பூங்கொடி யூடியுரைத்தது.

செழுமியமாளிகைச்சிற்றம்பலவர்சென்றன்பர்சிந்தைக்
கழுமியகூத்தர்கடிபொழிலேழினும்வாழியரோ
விழுமியநாட்டுவிழுமியநல்லூர்விழுக்குடியீர்
விழுமியவல்லகொல்லோவின்னவாறுவிரும்புவதே. (ருசுரு)

ஊடனீடவாடியுரைத்தல்.

சங. பே. பெற்ருர்க்கானந்தம் பிறிவிலையென்றது.

சங. சி. வாடா வூட-
னீடா வாடியது.

திருந்தேனுயநின்றசிற்றம்பலவர்தென்னம்பொதியி
லிருந்தேனுயவந்திணைமலர்க்கண்ணினின்ேறக்கருளிப்
பெருந்தேனெனநெஞ்சுகப்பிடித்தாண்டநம்பெண்ணமிழ்தம்
வருந்தேலதுவன்றிதுவோவருவதொர்வஞ்சனையே. (நகூச)

துனியொழிந்துரைத்தல்.

சச. பே. பெத்தம்போல முத்தியினின்றது.

சச. சி. தகுதியினூரன் மிகுபதநோக்கிப்
பனிமலர்க்கோதை துனியொழிந்தது.

இயன்மன்னுமன்புதந்தார்க்கென்னிலையிமையோரிறைஞ்சுஞ்
செயன்மன்னுஞ்சீர்க்கழற்சிற்றம்பலவர்தென்னம்பொதியிற்
புயன்மன்னுகுன்றிற்பொருவேறுணையாப்பொம்மென்னிருள்வா
யயன்மன்னும்யானைதுரந்தரிதேருமதரகத்தே. (நகூரு)

புதல்வன்மேல்வைத்துப்புலவிதீர்தல்.

சரு. பே. முத்தியினுஞ்சுகம் புதிதாய்த்தோன்றியது.

சரு. சி. புதல்வனது திறம்புகன்று
மதராரிக்கண்ணி வாட்டந்தவிர்ந்தது.

கதிர்த்தநகைமன்னுஞ்சிற்றவ்வைமார்களைக்கண்பிழைப்பித்
தெதிர்த்தெங்குநின்றெப்பரிசளித்தானிமையோரிறைஞ்சு
மதுத்தங்கியகொன்றைவார்சடையீசர்வண்டில்லைநல்லார்
பொதுத்தம்பலங்கொணர்ந்தோபுதல்வாவெம்மைப்பூசிப்பதே. (நகூசு)

## கலவியிடத்தூடல்.

சசு. பே. ஆனந்தங்குரு வடியேபேணல்.
சசு. சி. சீறடிக்குடைந்த நாறிணர்த்தாரவன்
றன்மைகண்டு பின்னுந்தளர்ந்தது.

சிலைமலிவாணுதலெங்கையதாகமெனச்செழும்பூண்
மலைமலிமார்பினுதைப்பத்தந்தான்றலைமன்னர் தில்லை
யுலைமலிவேற்படையூரனிற்கள்வரிலென்னவுன்னிக்
கலைமலிகாரிகைகண்முத்தமாலைகலுழ்ந்தனவே. (௩கூஎ)

## முன்னிகழ்வுரைத்தூடறீர்த்தல்.

சஎ. பே. அருதியேயின்ப மாவயர்ந்து
மிருந்ததற்கெண்ணி யின்பமாயினது.
சஎ. சி. முன்னிகழ்ந்தது நன்னுதற்குரைத்து
மன்னுபுனலூரன் மகிழ்வுற்றது.

ஆறூர்சடைமுடியம்பலத்தண்டரண்டம்பெறினு
மாறூர்மழவிடையாய்கண்டிலம்வண்கதிர்வெதுப்பு
நீறூர்கொடுநெறிசென்றிச்செறிமென்முலைநெருங்கச்
சீறூர்மரையதழிற்றங்குகங்குற்சிறுதுயிலே. (௩கூஅ)

## பரத்தையைக்கண்டமைகூறிப்புலத்தல்.

சஅ. பே. இன்பசுகம்புணர் வெங்குமாகி
மற்றொன்றறியா வகையாய்நின்றது.
சஅ. சி. பரத்தையைக்கண்ட பவளவாய்மாதர்
அரத்தநெடுவே லண்ணற்குரைத்தது.

ஐயுறவாய்நம்மகன்கடைக்கண்டுவெண்டேருருட்டு
மையுறுவாட்கண்மழவைத்தழுவமற்றுன்மகனே
மெய்யுறவாமிதுன்னில்லேவருகெனவெள்கிச்சென்றாள்
கையுறுமான்மறியோன்புலியூரன்னகாரிகையே. (௩கூகூ)

ஊதியமெடுத்துரைத்தூடறீர்த்தல்.

சகூ. பே. அருளுயிர்பூரண வானந்தமாறல்
சிவத்துக்குரைத்துத் திறம்பாதின்ப
மாக்கிமிகவு மருண்மிகமகிழ்தல்.

சகூ. சி. இரும்பரிசி லேற்றவர்க்கருளி
விரும்பினர்மகிழ் மேவுதலுரைத்தது.

காரணிகற்பகங்கற்றவர்நற்றுணைபாணரொக்கல்
சீரணிசிந்தாமணியணிதில்லைச்சிவனடிக்குத்
தாரணிகொன்றையன்றக்கோர்தஞ்சங்கநிதிவிதிசே
ரூருணியுற்றவர்க்கூரன்மற்றியாவர்க்குமூதியமே. (சOO)

திருச்சிற்றம்பலக்கோவையாருண்மைமுற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

---

# பாட்டு முதற்குறிப்பகராதி.

# பிழைதிருத்தம்.

| பக்கம் | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| கசு | கஅ | வியர்துரைத்தலும் | வியர்துரைத்தலம் |
| உ0 | எ | காலத்திறல் | காலத்திறன் |
| ௩எ | கசு | "நடுங்கல் புலிமிசை | "நடுங்கல், புலிமிசை |
| சஉ | அ | சொல்லா | சொல்லார் |
| சஉ | கூ | ரேதே | யாதே |
| சரு | உ0 | பூமென்றழையும்மம் | பூமென்றழையுமம் |
| சசு | எ | கொங்கலர்தாரோய் | கொங்கலர்த்தாரோய் |
| சு0 | உ0 | இச்செறி | இற்செறி |
| சுக | உக | கருங்கண்ணி | கருங்கண்ணி |
| எ௩ | அ | துரும்புறற்செற்ற | துரும்புறச்செற்ற |
| அக | ச | வுற்றுது | வுற்றது |
| அஎ | கக | சி | சி. |
| அஎ | உ௩ | சிற்றம்பல்த்தாடு | சிற்றம்பலத்தாடு |
| கூஅ | ரு | பணங்களஞ்சாலும் | பணங்களஞ்சாலும் |
| கூஅ | அ | குணங்களஞ்சாற் | குணங்களஞ்சாற் |
| க0க | கச | தீங்கயிலாயச் | தீங்கையிலாச் |
| க0௩ | கக | வகுத்துரைத்தது | வகுத்துரைத்தது. |
| ககசு | உஉ | வெறுயாடு | வெறியாடு |
| ககஎ | உ௩ | மனமுபிரியா | மனமும்பிரியா |
| கஉக | கூ | நாடுக்காலே | நாடுங்காலே |
| கஉ௩ | அ | தெய்வம் | தெவ்வம் |
| கஉ௩ | கூ | பவ்வம் | பௌவம் |
| க௩ச | கஅ | யுரைக்கின்ற | யுரைக்கினற் |
| கருகூ | உ | வானந்தமாறல் | வானந்தமாதல். |

இவற்றுட் சிலபிழைகள் எல்லாப்புத்தகங்களினு மிருக்கமாட்டா.

# விளம்பரம்.



இப்புத்தகமும், சூடாமணி நிகண்டு பன்னிரண்டுதொகுதியும், திருவாதவூரடிகள் புராணமூலமும், கல்லவையந்தாதிமூலமும், வாங்க வேண்டியவர்கள் சென்னையில் முத்தியாலுப்பேட்டை தம்புச்செட்டி வீதி - ௩௧௬ நெ. ரிப்பன் அச்சியந்திரசாலைத்தலைவர் ம-௱-௱-ஸ்ரீ. சை. இரத்தினச்செட்டியாரவர்களிடத்திலும், முத்துப்பேட்டையில் ம-௱-௱-ஸ்ரீ. பெரி. நா. சொக்கலிங்கச்செட்டியாரவர்களிடத்திலும், காரைக்குடியில் ம-௱-௱-ஸ்ரீ. செ. வு. மெ. சேவகச்செட்டியாரவர்களிடத்திலும், ம-௱-௱-ஸ்ரீ. சுந்தரதேசிகரவர்களிடத்திலும், ம-௱-௱-ஸ்ரீ ராம. நா. நாராயணச்செட்டியாரவர்களிடத்திலும், தேவகோட்டையில் ம-௱-௱-ஸ்ரீ. வீ. ர. லெ. சிந்நயச்செட்டியாரவர்களிடத்திலும், திருநெல்வேலியில் ம-௱-௱-ஸ்ரீ. விசயத்துவசபத்திராதிபர் சி. தாமோதரம்பிள்ளையவர்களிடத்திலும், திருவாரூரிலே ம-௱-௱-ஸ்ரீ ச. சபாபதிப்பிள்ளையவர்களிடத்திலும், யாழ்ப்பாணத்தில் கந்தர்மடச் சைவப்பிரகாச வித்தியாசாலையில் ம-௱-௱-ஸ்ரீ. க. அருணாசலவுபாத்தியாயரவர்களிடத்திலும், ம-௱-௱-ஸ்ரீ. த. நடராசஐயரவர்களிடத்திலும், ம-௱-௱-ஸ்ரீ. ராகவப்பிள்ளையவர்கள் பலசரக்குக்கடையிலும் விலைக்கு வாங்கிக்கொள்ளலாம்.

| | | ரூ. | அ. |
|---|---|---|---|
| திருச்சிற்றம்பலக்கோவையாருண்மை | ... | 0 | அ |
| நிகண்டு பன்னிரண்டுதொகுதி | ... ... | க | 0 |
| திருவாதவூரடிகள் புராணமூலம் | ... ... | 0 | ச |
| கல்லவையந்தாதி | ... ... ... ... | 0 | க |

